# ஆசிரியர் குழு

1. வித்துவான் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் அவர்கள்
ஸ்ரீ காசிமடம் இளவரசு, திருப்பனந்தாள்.
2. திரு. கே. சிவராமன் அவர்கள் M. A.,
சைவ சித்தாந்த தத்துவ விரிவுரையாளர்,
காசிச் சர்வகலாசாலை, காசி.
3. திரு. கே. எம். வேங்கடராமையா அவர்கள் M. A. B. O. L.,
பிரின்ஸிபால், செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்
4. ராவ்சாஹிப், வித்துவான். திரு. கு. அருணாசலக் கவுண்டர்
அவர்கள், தலைமைத் தமிழ் விரிவுரையாளர், ம. தி. தா. இந்துக்
கல்லூரி, திருநெல்வேலி.
5. திரு. ஆ. சி. ஷண்முகநயினார் பிள்ளை அவர்கள் B. A., B. L.,
வழக்கறிஞர், தென்காசி.
6. திரு. டி. எச். விவேகானந்தம் பிள்ளை அவர்கள் B. A., B. L
(Verification Officer) இந்து அறநிலைய இலாகா,
20. நுங்கம்பாக்கம் ஹைரோடு, சென்னை - 6.
7. திரு. T. B. சித்தலிங்கம் அவர்கள் M. A.
தமிழ் விரிவுரையாளர், காசி இந்துப் பல்கலைக்கழகம், காசி.

T. M. குமாரகுருபரன் பிள்ளை B. A., B. L.,

நிர்வாக ஆசிரியர்.

## உள்ளுறை

உ

சிவமயம்

திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 15 | குரோதி-ௌ புரட்டாசி திங்கள் 1-ம௳ [17-9-64] | இதழ் 9

# தில்லைச் சிவகாமியம்மை யிரட்டைமணிமாலை

(கட்டுரை 5)

தொண்டைமண்டலாதீனம் மகாசந்நிதானம்

**சீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் அவர்கள்**

ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் மடாலயம்,

காஞ்சிபுரம்.



"கல்லுருகுங்காலம் கழுகறியும் அக்காலம்" என்னும் முதலடியையுடையதொரு தனிப்பாடலின் ஈற்றடி "ஒருகாம்பிரு தலையும் பூ" என்பது. இதன் கண் 'பூ' என்பது இருபொருளது. கழைக்கூத்தி, தான் அக்கழையுச்சியில் ஆடிய வேளையிற் பூப் புற்றுளாம். ஆகவே அக்கழைக்காம்பின் மேற்றலையும் பூச்சார் புடையதாயிற்று. கீழ்த்தலையும் பூ (நில)ச் சார்புடையதாயிற்று. அதனைத் தன்னை ஆட்டுவிப்பவனுக்கு அக்கழைக் காம்பின் மேற்றலைக் கண், தனக்குற்ற பூப்பைக் குறிக்கக் கருதி, 'ஒரு

காம்பு இருதலையும் பூ' என்றுள், அத் தனிப் பாடலைப் பாடிய பாவலன் தன் கவித்திறங்களுள் ஒன்றனை இவ்வாறு தோற்றி விட்டான். இதைப் புகழுடல் பெற்ற மு.இராகவையங்கார் வெளியிட்ட 'பெருந்தொகை' என்னுந் தனிப்பாடற்றிரட்டிற் காணலாம்.

ஆசிரியர் குமரகுருபர முனிவர் அருளிய இப்பாடலிலும் "செம்பொன்வட மேருவில்லியை வாட்கணம் பாற்பொருவல்லி பூத்தலின் அன்றே இப் பூமியைப் 'பூ' என்பதே" என்று (பூ-பூமி, மலர்ப்பூ என்னும்) இருபொருளில் அமைத்துள்ளமை அறிக. விளக்கத்தின் பொருட்டு மலர்ப்பூ என்றது சிலர்க்குக் குற்றமென்று தோன்றலாம். அது குற்றம் அன்று. மலர் தலையுடைய பூ என்பது பொருள். மலராகிய பூ எனினும் பொருந்தும். மிக்க புணர்ச்சியாதலின் வினைத் தொகையாகாது. "நறுமலர்ப் பூவும் நீரும் நாடொறும் வணங்குவார்க்கு அறிவினைக்கொடுக்கும் ஆருரப்பனே யஞ்சினேனே" என்னுந் திருப்பாட்டின் பிற்பாதியைக் காட்டிக், குற்றமாகாமையைத் தோற்றிக், குற்றமென்னும் அச் சிலரை யஞ்சல் அறிவார் தொழில்.

'பூ' என்னுஞ் சிலேடைப் பொருட் பாடல் பற்பல உள. அவற்றையெல்லாம் இங்குக் காட்டல் ஒல்லாது. இனி அடுத்த ஐந்தாவது செய்யுளைக் கருதலாம்.

"பூத்ததுவும் ஈரேழ் புவனமே யப்புவனம்
காத்ததுவும் அம்மை கருணையே-கூத்தரவர்
பாடுகின்ற வேதமே பாராவிப் பாரோடுங்க
ஆடுகின்ற வேதமே யங்கு."

இங்கு "விதிவாய் மிகும் வேதியா மிழலை மேவிய வேதியா" என்று திருஞான சம்பந்த சுவாமிகள் திருவாக்கில் வந்தவாற்றை நோக்கி, வேதியா, வேதியா என்று இருவேறு பொருளில் நின்றவண்ணம் இங்கும் கொள்க. இதில் 'வேதமே' என்று ஈரிடத்தில் அமைந்து சிலேடையாய்ப் பொருள் வேறுபடுதலை அறிக. பாடுகின்ற வேதமே பாரா; இப் பார் ஒடுங்க ஆடுகின்ற ஏது அமே அங்கு, இப்படிப் பிரித்துக்கொண்டு, ஆடுகின்ற ஏதுவைப் பாடுகின்ற வேதமே பாரா எனல்வேண்டும். பாரா என்னும் பன்மைப் பயனிலையால், எழுவாய் ஆகிய

வேதம் பன்மை எனல் புலப்படும். இதனை நன்னூலார் 'பால்பகா அஃறிணைப் பெயர் பால் பொதுமைய, என்றதால் அறிவித்தார். இதுபோன்ற இடங்களில் 'கள்' இருத்தியருத்துதல் குற்றம் ஆகும். அது குற்றமென்றறிதல் தருக்க நூலுணர்ச்சிபுடை யார்க்கே யியலும். தொல்காப்பியரும் அக்கருத்துடையவரே. 'அவன் எருதோட்டினன்' என்னுமிடத்தில் எத்தனை யெருது என்னும் வினா எழாது; ஓரெருதே கொள்ளக்கிடத்தலின். ஓட்டப் பட்டவை பல ஆயின், எருதுகளை எனப்பன்மையிற் சொன்மை வேண்டும். அதனால் அங்குக் 'கள்' இன்றியமையாதது. பற்றுக் குறையுணவுக்கு இன்றியமையாதது 'கள்' என்னுங்கிளர்ச்சியும் இவ்வுலகில் உளது. தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில், கள்ளென்னிறுதி.... கொள்வழியுடைய தெரியுமோர்க்கே' என் றுள்ளது. ஆண்டுக் கண்டு அதன் மெய்ப்பொருளை யுணர்க. பூத்தது புவனம். (அப்புவனத்தைக்) காத்தது கருணை. பாடுகின்ற வேதமே ஆடுகின்ற ஏது(வைப்) பாரா. இவ்வாறு சொற் சுருக்கம் செய்து பொருளமைப்பு உணர்தல் நன்று. அம்மே என்பது அமே என நின்றது இடைக்குறை.

படைப்பு, காப்பு, அழிப்பு, மறைப்பு, அருள்வு என்னும் ஐந் தொழிலும் வினை முதலைக் குறித்துளவான பெயரால் உணர்த்தப் பட்டன. அவையே தோற்றம், நிலை, இறுதி, மறைப்பு, அருள் என்றும் குறிக்கப்படும். படுங்கால், செய்வோனைக் குறித்து மறைப்பு அருள் என்ற இரண்டும் செயப்படு பொருளைக் குறித்து ஏனை மூன்றும் வழங்கப்படுதல் உணர்க. செய்வினையைக் குறித்து வழங்கின், (1) தோன்றல்,தோற்றம், (2) நிற்றல்,நிலை, (3) அழிதல், இறு தல், இறுதி, ஈறு, (4) மறைத்தல் (பிறவினை) (5) அருளல் என்று சொல்லப்படும். கம்பர் "உலகம் யாவையும் தாம் உளவாக்கலும் நிலை பெறுத்தலும் நீக்கலும்" என முத்தொழிலை யும் பிறவினையாற் கூறியவாறு காண்க. ஆதல், பெறுதல், நீங்கல் என்னும் மூவினையும் உலகம் யாவைக்குமுரிய (தன்) வினையாதல் வெளிப்படை.

அம்முத்தொழிலுள் நிலை பெறுத்தற்கண் மறைப்பும் அம் மூன்றன்கண்ணும் அருள்வும் அடக்கப்பட்டன. அடக்கவும் வேண்டா. தானே அடங்கும் இயல்பினது அருள். சிவஞான

சித்தியாருள், 'பார்த்திடின் அருளே எல்லாம்' (சூ. 1. திருவிருத்தம் 37) என்று உணர்த்தியதுணர்க. அதன் உரையில், மாதவச் சிவஞான முனிவர் 'ஐந்தொழிலே அருட் செயலே' என்றது விளக்கம், செய்வதாகும்.

அவ்வைந் தொழிலும் பருமை (ஸ்தூலம்) நுண்மை (சூக்ஷ்மம்) நனிநுண்மை (அதி சூக்ஷ்மம்) என மூவகைப்படும்.

### ஸ்தூலபஞ்சக்ருத்யம்

உலகின் தோற்றமும் ஒடுக்கமும் பருமைப்பாலன. தோன்றிய வுலகம் ஒடுக்கம் உறுமளவும் நிலை பெறுவதை நிலை என்பர். பந்தம் என்பதே மறைப்பு. அருளை வீடு என்றும் குறிப்பர். இவ்வளவும் ஸ்தூலபஞ்சக்ருத்யம்.

தண்ணீர்க் குடம் நிலை பெறுதல் அதைத் தாங்கிச் செல்லும் வினைமுதலின் முயற்சியின்றி அமையாது. அதுபோலத், தோன்றிய வுலகம் ஒடுங்கும் அளவும் நிலைபெறுவதும் கடவுள் முயற்சியின்றி அமையாது. கடவுளுக்கு முயற்சி என்பது யாது? தோன்றிய உலகம் ஒடுக்கம் அடையும் வரையில் நிலைபெறுக என்னும் ஆக்ஞை (ஆணை) ஆகிய சங்கற்பமே கடவுளது முயற்சி. கடவுள் செயலெல்லாம் சங்கற்பமே. கடவுள் அல்லாதார், சாதனமின்றி எதையும் செய்ய வல்லார் அல்லாதாரே. அதனால், சங்கற்பசிருட்டி சாதன சிருட்டி எனப் பேதம் உறும். இது மகேசனுகிநின்ற சிவத்தின் தொழிலாகும்.

உலகினுட்பட்ட உயிர்ப் பொருளும் (சேதனமும்) உயிரில் பொருளும் (அசேதனமும்) முதல்வன் ஆணையால் ஏவப்படும் தம்தம் காரியங்களின் எல்லையைக் கடவாமல் நிற்கும் நிலையும் 'ஸ்திதி' யுள் அடங்கும்.

கடவுளைச் சிறப்பியல்பால் உணரும் மெய்யுணர்வு தோன்றும் வரையில், (அக்கடவுளது) பேரிரக்கம் உயிர்களிடத்தில் ஒருங்கே நிகழாதவாறு தடுத்து நிற்கும் உயிர்க் குற்றம் ஆணவ (மூல) மலசத்தியும் அதன் வழியுறும் மாயா மல சத்தியும், அதைப் பற்றுக் கோடாகக் கொண்டுறும் கரும மல சத்தியும் ஆம். அவ்வம்மல சத்தியின் வழிநின்று அவ்வுயிர்களை நடத்துவது கடவுளது சங்கற்பமே. அதுவே மறைப்பு. 'பந்தமும்

வீடும் ஆயினுர்' என்ருர் மாணிக்கவாசகர். பிறர் மறைப்பைக் குறித்துக்கூறும் எல்லாம் பொருந்தாதன.

## சூக்கும பஞ்சகிருத்தியம்

நுண்மையைந் தொழிலாவன:- அழித்த பின்னர், மேற்செய்தற் குரிய பருமையைந் தொழிலுக்குத் தகுதியாகும்படி கேவலாவத் தையில் நடாத்துவன. சூக்கும இச்சா ஞானக் கிரியைகளால் கேவலத் தில் சூக்கும ஐந்தொழில் செய்து ஸ்தூலலயமாய் நிற்கும் சிவம்,அதன்பின், ஆன்மாக்கள் கேவலத்தின் நீங்கிப் புனருற்பவம் ஆமாறு குறித்துத் தூலவிச்சா ஞானக்கிரியைகளோடு சேர்ந்து இரு வகை மாயைகளினின்றும் இருவகைப் பிரபஞ்சங்களையும் தோற்றுவிக்க மேல் முகமாய் நின்ற அவசரம் சூக்கும பஞ்ச கிருத்திய கர்த்தாவாதல். யோகம் பாலனம் என்பன இதையே குறித்தன.லயம், போகம், அதிகாரம் என்னும் மூன்று நிலையுள் இது நடுவணது. பிரபஞ்சம் அநாதி. அதன் ஆதி நமக்குத் தெரி யாது. அதுமுதற் கோடி. அதை நம்மனோரால் அறிய முடியாது. ஒடுங்கி மீளவுளதாகும் புனருற்பவமே அறிவு நூல்களால் உணர்த் தப்பட்டு வருவது.

பரமசிவன் முதலில், லயசிவனும் அடுத்துப் போக சிவனும் முடிவில் அதிகார சிவனுமாய் நிற்கும் அவசர பேதம் மூன்றனுள் சூக்கும வதிகாரம் மகேசன் ஆகிய நிலைக்கு உரியது. தூலவதி காரம் அநந்தேசன், உருத்திரன், மால், அயன், என்பவரை அதிஷ்டித்து நின்று மோகினி மான் என்னும் மாயைகளினின் றும் முறையே மிச்சிரப் பஞ்சமும் அசுத்தப்ர பஞ்சமும் தோற்று வித்துத் தொழில் செய்யும் அவசரம் ஆகும். சூக்கும பஞ்ச கிருத்தியம் சதாசிவனுல் நடத்தப்பெறுவது.

## அதிசூக்ஷ்ம பஞ்சகிருத்யம்

நனிநுண்மையைந் தொழிலாவன:- தோற்றம் முதலிய ஐந் தொழிலும் அவ்வவ் விஷயாநுபவந்தோறும் நிகழும். புருவ நடுவில் நின்று ஒரு விஷயத்தை அறியுங்கால், அதை விட்டு விட்டறிவதல்லாமல் இடைவிடாதறிவதில்லை. அறிய மாட்டாது உயிர். கருவிகள் எல்லாம் தொழிற்படும் வழியும் விட்டுவிட்டு அறிவதற் கேற்பக் கலாதிகளைச் செலுத்தும்(பிரேரகக்)கருவிகள்

செயற்படும். அவ்வாறு செயற்படுதல் பற்றி விடயத்தின் நுகர்ச்சிதோறும் அதிநுட்பமாய் ஐந்தவத்தை விரைய மாறி மாறிக் காற்ருடி சுழல்வதுபோல நிகழும். அங்கு அப்படி அறிதலே புசிப்பு. அயர்த்தலே ஆர்ச்சிப்பு. இடையீடின்றி அவ்வவ்விடய நுகர்ச்சி தோறும் அதி சூக்குமமாய் நிகழும் ஐந்தொழிலையும் மந்தவுணர்வுடையார் அறியவேண்டிக், கைப் பொருள் விழ்த்தித் தெளிதல் முதலிய தூலத்தில் வைத்துக் காட்டுவர் அறிஞர். அது தூலாருந்ததி நியாயம் பற்றியது. புவனம் பூத்தல் இதனல் இன்ன தன்மையது என்று ஆய்ந்தும் ஆழ்ந் தும் உணர்தல் வேண்டும். பஞ்ச கிருத்தியங்களுள் அதி சூக்குமம் கடவுளது நிஷ்களத்திலும் சூக்குமம் சகல நிஷ்களத்தி லும் தூலம் சகலத்திலும் நிகழும்

இவ்வுண்மையெல்லாம் அநுபவத்தால் உணரற்பாலவை. வேத வாக்கியங்கள் அறிவிக்க வல்லன அல்ல. வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாமல் அறிவிற்கு மட்டும் புலப்படும் கடவுள் நிலைகளை வாக்குருவமாகிய வேதங்களோ தெரிவிக்க வல்லன? அவை அதுசெய்யமாட்டாதனவே. அதனல், 'வேதமே பாரா' என்ருர் ஆசிரியர். அவ்வேதம் ஆண்டவன் அருளியனவே ஆயினும், நம் வாய்ச்சொல் நம்மையும் நம் நிலை செயல்களையும் அறியமாட்டாதன ஆதல்போல், அவன் வாய்மொழியும் அவனை யும் அவன் இயல்புகளையும் அறிய மாட்டாதனவே யாகும். ஆதலின் 'வேதமே ஏது பாரா' எனலாயிற்று. அம்மே என்னும் விளி அமே என விகாரப்பட்டது. இது செய்யுள் விகாரத்துள் தொகுத்தலாகும். செயற்கை விகாரமே செய்யுள் விகாரம். இயற்கை விகாரம் இயல்பு. பூத்தல், காத்தல், ஒடுக்கல் என்னும் முத்தொழிலும் இதிற் கூறப்பட்டன. ஆடுகின்ற ஆட்டம் முத் தொழிலே. பஞ்சகிருத்ய தாண்டவம், ஐந்தொழிற் கூத்து, முத் தொழிலாட்டம் எல்லாம் ஒன்றே. அலகிலா விளையாட்டு. என்றும் நீங்கலா விளையாட்டு என்றும் கம்பர் கூறியதாலும் ஆட்டு (கூத்து) இன்னவை எனப் புலப்படும். ஒடுங்க ஆடுதல் இருதிறத்தது. சருவ சங்கார காலத் தொடுக்கம் திருவடி நிழலொடுக்கம் என்பன அவ்விரண்டு. பாரொடுங்க ஆடுதலே, (1) அசேதனப்ர பஞ்சம் சேதனப்ரபஞ்சம் இரண்டும் சருவசங்கார காலத்து

ஒடுங்கும் ஒடுக்கத்துக்கும் (2) முத்தியிலும் மும்முதலும் நிற்கும் முறைமையில், உயிர்கள் மலம் நீங்கித் திருவடியில் ஒடுங்கும் ஒடுக்கத்திற்கும் உரியவாறு கொள்க. இரண்டிலும் அம்மை முறையே (1) திரோதாயுருபமாய் நின்ற சிவசத்தி (2) சிவ ஞானருபமாய் நின்ற சிவசத்தி என இருவேறு வடிவாய் நின்று உயிர்கட்கு அருள்கின்ற உண்மையை ஞான நூல்களைக் கற்றறிக. அத்துவாக்கள் ஆறனுள் தத்துவம் முதல் ஐந்தையும் தம்முள் அடக்கி நிற்கும் ஐந்து கலைகளும் திரோதாயிருபமாய் நின்ற சிவசத்தியில் அடங்கும். சிவசத்தி சிவன்கண் அடங்கும். அதுவும் பாரொடுங்க ஆடுகின்ற ஏது என்றதாற் குறிக்கப் பட்டது. அதை வேதம் உணர்தல் இல்லை.

(தொடரும்)

# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஐந்தாம் தந்திரம் Tantra the Fifth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., D. Litt.,
Member, Legislative Assembly,
MADRAS-31.

மலர் 15. இதழ் 8-ன் தொடர்ச்சி

### Sariya helps transcend Karma
### சரியையால் வினைக்கடல் தாண்டலாகும்

33 பத்துத் திசையும் பரமொரு தெய்வமுண்டு;
எத்திக் கிலரில்லை என்பதின்; அமலர்க்கு
ஒத்துத் திருவடி நீழல் சரணெனத்
தத்தும் வினைக்கடல் சாராது காணுமே.

The One God there is
He pervades the ten directions around,
In which direction can we say is He not there?
So, do thou, take refuge under the shadow of His Holy Feet
Then shalt thou cross the roaring Sea of Karma,
And safe reach the shores of Beyond.

பரம்பொருளாகிய இறைவன் பத்துத் திசைகளிலும் பரந்து நிற்கிருன்; அவன் இல்லாத இடம் என்பதில்லை. தூயோனுன அவனது இணையார் திருவடி நீழலே சரணம் எனக் கொள்ளுங்கள்; அப்பொழுது, அலை மோதும் வினைக் கடல் தாண்ட, அவனைக் காணலாம்.

குறிப்பு: வரி 3. சரண் என்றது முன்னைப் பாட்டில் தன் செயல் அற்றது என்பதையே. இது சரியை நெறிக்கு உரியது

கண்டவிட மெல்லாம் கடவுள்மயம் என்றறிந்து
கொண்டநெஞ்சர் நேயநெஞ்சிற் கொண்டிருப்பதெந்நாளோ

என்னும் தாயுமானவர் அருள்வாக்கு நினைவுறுதற்குரியது.

## True Worship is Worship of the Heart

34. கானுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுறு மாமல ரிட்டு வணங்கினும்,
ஊனினை நீக்கி உணர்பவர்க் கல்லது
தேன்மலர் பூங்கழல் சார வொண்ணுதே.

Thou mayst adore Him with Sandal, fragrance exceeding,
That grows on peaks atop in forests interior,
Thou mayst worship Him with the rarest of flowers
That bloom in Heavens gardens,
Unless thou shed thy fleshly attachments
And realiseth Him in the depths of thine heart
Thou shalt never never reach His holy Feet
That are as the flowers that shed the honey dew.

காடு சூழ்ந்த மலையுச்சியிலே வளரும் மணம் மிகுந்த சந்தனத்தை அரைத்து வணங்கினாலும், வானுலகிலே மலர்கின்ற அரிய பூக் கொளைக் கொய்து தொழுதாலும், என்ன பயன்? ஊன் படைத்த உடம்பின் பற்றினையறுத்து உணர்பவர்க் கல்லாது இறைவனது தேன்பிலிற்றும் மலரடிகளைச் சார முடியாது.

## Bhakti begetteth Grace

35. கோனக் கன்றுயே குரைகழல் ஏத்துமின்
ஞானக் கன்றுகிய நடுவே யுழிதரும்
வானக் கன்றுகிய வானவர் கைதொழும்
ஆனக்கன் றீசன் அருள் வள்ளமாமே.

The Lord is thy Shepherd
Seek thou His feet as doth the yearning calf
He shall seat you amidst his Children of Wisdom;

The Devas, the Beings of Heaven, boweth low
before Him;
Great is His love, as of the cow to her calf;
And bounteous His Grace, beyond beyond count.

பசுபதியாகிய இறைவன் திருவடிகளைக் கன்று போல நெகிழ்ந்து வணங்குங்கள்; ஞான புத்திரர்கள் நடுவே உங்களை விற்றிருக்கச் செய்வான்; வானுலகத் தோன்றல்களான தேவர்கள் தொழுதேத்தும் ஈசன் பசு தன் கன்றுக்குப் பால் சுரப்பது போல் பரிவோடு, அருளை நல்குவான்.

## Bhakti's end is Lord's Abode

36. இதுபணிந்து எண்டிசை மண்டலம் எல்லாம்
அதுபணி செய்கின்ற வளொரு கூறன்;
இதுபணி மானுடர் செய்பணி; யீசன்
பதிபணி செய்வது, பத்திமை காணே.

She fashioned this world
And all universe that fills space in directions eight
Her–He consorteth, sharing Himself with Her
To worship Him is but the duty of humans here
below,
And that which fashions a place in Lords Abode
Is Bhakti true.

இந்த உலகையும், எட்டுத் திக்குகளிலும் பரந்த அண்டங்கள் அனைத்தையும் படைத்த அருள் சக்தியோடு கூடி, மாதொருபாகனாய், நிற்பவன் சிவபெருமான்; அவனைப் பணிவது மனிதர் செய்ய வேண்டிய கடமையாகும்; ஈசன் பதியை நல்குவது பக்தி நெறியே யாகும்.

குறிப்பு: 1 வரி. இது பணிந்து – இந்த உலகைப் படைத்து
2 வரி அது பணி – ஏனையவற்றையும் படைத்து
3 வரி. இது பணி – இங்கு பணிவது
செய் பணி – செய்ய வேண்டிய கடமை
4 வரி. பதி பணி – வீட்டுலகத்தை அருள்வது

## Bhakta ends up as Gnani

37. பத்தன் கிரியை சரியை பயில்வுற்றுச்
சுத்த அருளால் துரிசற்ற யோகத்தில்
உய்த்த நெறியுற்று, உணர்கின்ற ஞானத்தால்
சித்தம் குருவரு ளால்சிவ மாகுமே.

The Bhakta to begin with practises Saiya and Kriya,
Then blessed with grace takes to yoga pure;
And that way reaches the path of Gnana
And in the end by Guru's grace becomes one with Siva.

முதலிலே பத்தன் கிரியை சரியைகளைப் பயில்கின்றான்; பின்னே தூய இறை அருளால் குற்றமுற்ற யோக நெறியில் இறங்குகின்றான்; அதிலும் தேர்வுற்று, ஞானநெறியை மேற் கொள்கின்றான்; குருவின் அருளால் சித்தம் சிவமாகி தான் அவ னென்ற இரண்டற்ற நிலையை இறுதியில் எய்துகின்றான்.

## Daily I beseecheth His Grace

38. அன்பின் உருகுவன்; நாளும் பணிசெய்வன்
செம்பொன் செய்மேனி கமலத் திருவடி
முன்பு நின்றாங்கே மொழிவது "எனக்கருள்!"
என்பினுட் சோதி இலங்கு கின்றானே.

The Lord is resplendent as pure Gold
His Feet are like the lotus bloom
At them I pray: "Lord, Grant me thine Grace!"
And in love I melt and daily thus pray
And the Lord that is light within my bones
Himself doth reveal to me.

இறையன்பினால் நான் உருகுகின்றேன்; ஒவ்வொரு நாளும் பணிந்து வணங்குகின்றேன்; பொன்னார்மேனி எம்மானின் தாமரைத் திருவடிகள் முன் நின்று, "எனக்கு அருள்வாய்" என்று வேண்டுகின்றேன். என் என்பினுட் சோதியாக நிற்கும் இறைவனும் எனக்கு வெளிப்படுகின்றான். (தொடரும்)

# திருவருட்பிரகாச வள்ளலாரென்னும் சிதம்பர இராமலிங்க சற்குரு புலம்பற்கண்ணி*

தொகுத்தவர், திரு. P. P. துரைசாமி அவர்கள்,
கோயமுத்தூர்.

[மலர் 15, இதழ் 8-ன் தொடர்ச்சி]

வானங் கண்டாடு — மயில்போலே யென்றெனது
தானங் கண்டாடுந் — தரம்வருமோ சற்குருவே. 161

அருட்பா வினுள்ள — அரும்பொருளை யோர்ந்தே
மருட்பாலை நீக்கும் — வகைவருமோ சற்குருவே. 162

துன்மார்க்க சங்கம் — தொலைத்து நினைப்போற்றுகின்ற
சன்மார்க்க சங்கமதைச் — சார்வேனோ சற்குருவே. 163

உன்னு லெனக்காவ — தோரனந்தங் கோடியுண்டே
யென்னு லுனக்காவ — தேதுளது சற்குருவே. 164

முறையுண்டேற் கேட்கு — முறையுண்டா மென்னுந்
துறைவிட்டு வாளுள் — தொலைத்துவிட்டேன் சற்குருவே. 165

அலைகின்ற வென்னெஞ் — சடக்க நினையன்றி
நிலையுலகி லுள்ளவரார் — நின்மலவென் சற்குருவே. 166

அன்னையுநீ யப்பனுநீ — யாரியனு யாண்டவனீ
யென்னையினிக்கைவிடவு—மெண்ணுவையோ சற்குருவே. 167

கண்வலியினுலே — கவலைகொண்டவென் கனவின்
மண்பரவு மாபுரத்தே — வாவென்ற சற்குருவே. 168

பணித்தபடி வாழைப் — பழத்தினு லன்பன்
குணித்தபடி யந்நோய் — குலையவைத்த சற்குருவே. 169

பருவினுற் றுன்படையப் — பார்த்தே கனவிற்
திருவேர கத்தினிலே — தீருமென்ற சற்குருவே. 170

(தொடரும்)

*திரு. ச. மு. கந்தசாமி பிள்ளையவர்கள் இயற்றியது.

கல்லாடம் :



# அருள்பொழி கடைக்கண்

திரு. பொ. முத்தரசு அவர்கள், M. A., B. T.,
தமிழ்த்துறைத் தலைவர், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கல்லூரி,
அருள்நந்திநகர் – ஸ்ரீவைகுண்டம்.



தமிழ் இலக்கியத்தில் உள்ள சிறந்த நூல்களுள் கல்லாடம் ஒன்று. இது பொருள் நூலாகவும், புகழ் நூலாகவும் அமைந்த பொற்புடையது. பொருள், மக்கள் வாழ்வைப் பண்படுத்தும் அகப்பொருள். புகழ், அம்பலத்தாடுவானது அருட்கழல் பாடும் பொருள்சேர் புகழ். இவற்றை அடக்கிய அகவற்பாக்கள் நூறு கொண்டது கல்லாடம். புறத்தே பாயிரமாகப் பிள்ளையார் வணக்கப் பாடல் ஒன்றும், முருகப் பெருமானைப் போற்றும் பாடல் ஒன்றும் அணி செய்கின்றன. சங்கத்தொகை நூல் களுக்குப் பின்னர் எழுந்தவற்றுள் ஆசிரியப்பாவில், சொற் செறிவும் பொருள் ஆழமும் அமைந்த நூல்களுள் இதனுக்கு இணையானது பிறிதில்லை என ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.

## செவி வழிச் செய்தி :

மாணிக்கவாசகப் பெருமான் திருவாய் மலர்ந்த திருச் சிற்றம்பலக் கோவையாரின் சிறப்பினை உலகறியச் செய்ய எழுந்த நூல் இது. கோவையாரிலிருந்து நூறு துறைகளைத் தேர்ந்தெடுத்து ஒவ்வொரு துறைக்கும் விளக்கமாக ஒவ்வோர் ஆசிரியப்பா பாடியுள்ளார் இதன் ஆசிரியர் கல்லாடனார். இந் நூறு பாக்களும் தமிழறியும் பெருமானாகிய ஆலவாய் அண்ண லின் திருமுன்பு, அரங்கேற்றப் பெற்றன. பாட்டுக்குருகும் பைந்தமிழ்ச் சொக்கர், ஒவ்வொரு பாடலையும் கேட்டு, அது நிறை வடையும்போது தம் மகிழ்ச்சியைப் புலப்படுத்தும் அளவில் திருமுடி துளக்கியருளினர். இங்ஙனம் இந்நூலின் பெருமை

குறித்து நாட்டில் ஒரு செவிவழிச் செய்தி தொன்று தொட்டு நிலவி வருகிறது, இது குறித்த பழம் பாட்டு வருமாறு :

கல்லாடர் செய்பனுவல் கல்லாட நூறுநூல்
வல்லார்சங் கத்தில் வதிந்தருளிச்—சொல்லாயும்
மாமதுரை ஈசர் மனமுவந்து கேட்டுமுடி
தாமசைத்தார் நூறு தரம்.

நூலாசிரியர்:

கல்லாடம் என்பது இறைவன் கோயில் கொண்டெழுந் தருளியிருக்கும் தமிழ்நாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. இது திருவாசகத்துள் போற்றப் பெறுவது. இறைவன் பெயரையும், இறைவன் எழுந்தருளியுள்ள திருப்பதிகளின் பெயரையும் மக்களுக்கு இட்டு வழங்கும் மரபினை யொட்டி, இதன் ஆசிரியர் கல்லாடர் என வழங்கப் பெற்றார் என்பது அறிஞர் கருத்து. அவரால் இயற்றப்பெற்ற இந்நூலும் கல்லாடம் எனப் பெற்றது. தமிழ் இலக்கியத்துள், கல்லாடர் என்ற பெயருடன் பலர் விளங்குகின்றனர். தொகை நூல்களுட் பதினான்கு செய்யுட்கள் (அகம்-7, புறம்-5, குறுந்தொகை-2) கல்லாடர் பெயரில் அமைந்துள்ளன. திருவள்ளுவமாலைப் பாடல் ஒன்றைக் கல்லாடர் பாடியுள்ளார். பதினோராம் திருமுறையுள், திருக்கண்ணப்ப தேவர் திருமறம் பாடியவர் கல்லாட தேவ நாயனார். தொல்காப்பியத்துக்கு உரை கண்டவரும் கல்லாடர் என்றே அழைக்கப் பெறுகிறார். இந்நூலாசிரியரும் கல்லாடரே. எனவே இவை எல்லாவற்றுக்கும் ஆசிரியர் ஒருவரே என்று துணிதல் இயலாது. பல வகைச் சான்றுகளையும் கொண்டு நுணுகி ஆராய்ந்து முடிவு செய்ய வேண்டியவற்றுள் இதுவும் ஒன்று.

நூற்சிறப்பு:

இந்நூல், எழுந்த காலம் முதல் சென்ற நூற்றாண்டின் இறுதிவரையில் தமிழ்ப் புலமையில் விருப்பமுடையோர் பலராலும் பயிலப் பெற்ற சிறப்புடையது. திருச்சிற்றம்பலக் கோவையாரின் சிறப்பெடுத்துரைக்கும் நோக்கத்தோடு பாடப்பட்ட இதனுள் பற்பல கதைகள், அடியார் வரலாறுகள், இசை, நாட்டியக் கலைச் சிறப்புக்கள், வாட்போர் முறை முதலியவை சுருக்கமாகவும், சுவை நிரம்பவும் சொல்லப் பெற்றுள்ளன,

ஏனைய உலகியற் செய்திகளும், வாழ்வியல் உண்மைகளும் உள்ளம் கொள்ளை கொள்ளும் பேரழகோடு உரைக்கப்பெற் றுள்ளன. இதனைப் பயின்றூர் சிறப்பும் பெருமையும் குறிக்கப் பழமொழிகளும் வழங்கி வந்தன. "கல்லாடம் கற்றவனோடு சொல்லாடாதே", என்பதும் கல்லாடம் கற்றவனோடு மல்லா டாதே" என்பதும் அப் பழமொழிகள். எட்டுத் தொகையும் பத்து பாட்டும் மக்கள் உள்ளத்தில் இடம் பெறுதற்கு முன், இந்நூல் அங்கு நிறைந்திருந்தது என்ருல் அது மிகையன்று.

பிள்ளையார் வணக்கம்:

எடுத்த செயல் இனிது நிறைவேறுதற் பொருட்டுச் செய்யத் தக்க முதற்கடமை பிள்ளையார் வழிபாடு. இது நந் தமிழ்நாட்டில் தொன்று தொட்டு நிகழ்ந்து வரும் மரபு. பிள்ளையார் வழிபாடு பரவியவரலாறு குறித்து ஆராய்ச்சியாளர் முரண்படினும், பிள்ளை யார், ஓங்காரமே வடிவமானவர் என்பதில் யாரும் முரணுவ தில்லை. ஓங்காரத்தின் தொன்மை நம் மொழியின் தொன்மை யோடு இயைந்தது. வையமும், வானமும் அதற்கப்பாலும் அளந்த தமிழை ஆசிரியர் சேக்கிழார் "அசைவில் செழுந்தமிழ்" என்றும், கம்பர் "என்றும் உள தென்தமிழ்" என்றும் போற்றி யுள்ளமை, அதன் காலங்கடந்த இயல்பினைக்காட்டும். அது போலவே பிள்ளையாரும் முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளாகவும்,பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற் றியராகவும் இலங்குபவர். அவரை வணங்குவது வேறு எவ் வகை வணக்கத்தையும் தன்னகத்துஇணைப்பது. அவர் திருமேனி உலகப்பொருள் அனைத்தையும் – ஆண், பெண், உயர்திணை, அஃறிணை ஆகிய எல்லாவற்றையும்–தன்னகத்துத் திகழச் செய் வது. பிள்ளையார் வழிபாட்டில் தமிழகம் கொண்டுள்ள அழுத்த மான பற்றுதலுக்கும் உறுதியான நெறிமுறைப் பழக்கத்திற்கும் 'பிள்ளையார் குட்டு குட்டியாச்சு' என்ற பேச்சு வழக்கும் "பிள்ளை யார் சுழி போட்டாயிற்று" என்பதும் போதிய சான்றுகள். இத்தகைய அழியா மரபு வழிப்பட்ட சான்றோர் வழக்கத்தைக் கல்லாடனுர் உணர்த்தும் முறைமை தனிச் சிறப்புடையதாகும்.

பிள்ளையார் பிறை நிலாத் தங்கிய பொன்மலை போல விளங் குகிருர். அவர் செங்கதிர்த் திரள் போன்ற செம்மேனி எம்மான்.

அவரது யானை முகம் அருள் நிறைந்து விளங்கும். அருளுக்கு எடுத்துக்காட்டாக முக்கண்களும் திகழும் முகத்தில் பகை மாற்றிய கொம்பு பிறை நிலாப் போல் இலங்கும். உலகத்தில் படைப்புக் காலந் தொட்டு நிலவும் பலவகை நெருப்புக்களும் தத்தம்நிலை கடவாதவாறு அவரது முறம் போன்ற செவிகள் சிறுகாற்றெழச் செய்து காவல் புரியும். அவரது நீண்டதுதிக்கை யானைமுக அரக்கன் தடுமாறும் வண்ணம் பெருங் காற்று எழுப்பும். உயிர்கள் வழிபாட்டின் வாயிலாகவே ஈடேறமுடியும் என்பதைக் காட்டுவார் போன்று, கனி பெறுவதற்காக அம்மை யப்பரை வலம் வந்தவர். அவரே உயிர்களின் பாசத் தளையை அறுப்பவர்; பாவக் கடலைக் கலக்குபவர்; நெக்கு நெக்கு உருகி நினைப்பவர் நெஞ்சத்துள், நேசத் தளைப்பட்டு நிற்பவர். அவரது திருவடிகளை வணங்குதல் ஒன்றே நாம் செய்யற்பாலது. ஏன்?

''நாம், நூலால் கூடு இழைத்து அதனைவிட்டு வெளியே வர வழி யறியாது அல்லற்பட்டு முடிவில் கூட்டினுள்ளேயே இறக்கும் புழுப்போன்று, அறிவில்லாதவர். உயிர்கள் எங்கெங் கிருந்து ஏதேது வேண்டினும், அங்கங்கிருந்து அருள் செய்யும் அருட்பெருஞ் சோதி, அவர். உயிர்களின் கருத்தறிந்து முடிப்பது அவர் கடமை. ஆதலின் உயிர்கள் படும் துன்பத்தை முடிக்கவும், அவை எண்ணும் எண்ணங்களை நிறைவேற்றவும் வேண்டி அவர் திரு வடிகளை வழிபடுவோம்'', என்கிறுர். இத்தகைய பொது வழி பாட்டோடு, சிறப்பு வழிபாடாகிய தாம் எடுத்துக்கொண்ட நூல் நிறைவு பெறுதலையும் எத்துணை அடக்கத்தோடு வேண்டிக் கூறுகிறுர், காண்க.

குறைதரு பிறவியின் நிறைதரு கலக்கமும்
என்மனத் தெழுந்த புன்மொழித் தொகையும்
அருள்பொழி கடைக்கண் தாக்கித்
தெருள்உற ஐய முடிப்பைஇன் றெனவே.

எல்லாம் வல்ல செம்மேனி எம்மானின் அருள்பொழி கடைக் கண் நோக்கம் தாக்கினுல் அல்லது எச்செயலும் முடிவு பெருமை யின் அதுவே தம் நூலை இனிது நிறைவேறச் செய்ய வேண்டும் என்று வழிபடுகிறுர். நாமும் அவர் காட்டும் வழியில் நின்று பிள்ளையாரது பேரருள் நோக்கிற்கு உரியராவோமாக.

# திருவருட்பயன் – தெளிவுரை

பண்டித வித்துவான், சைவப் புலவர், சித்தாந்த நன்மணி,
**திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள்,**
தமிழ்ப் பேராசிரியர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்,

---

(மலர் 15. இதழ் 8-இன் தொடர்ச்சி)

76. உற்றாரும் பெற்றாரும் ஓவா(து) உரையொழியப்
பெற்றாரும் அற்றார் பவம்.

(தெ – ரை) மெய்ப்பொருளைப் பொருந்தினவர்களும், அதனைத் தெளிந்தவர்களும், இடையறாது மௌன நிலையுடையோரும் பிறவியற்றவராவர் என்பதாம்.

பிறவிப் பெருங்கடலை நீந்துதற்குரியார் இவரென வரையறுத்தவாறு. இதற்கு இவ்வாறன்றி, "அந்தப் பொருளைப் பொருந்தின பேர்களும், தெளியப் பெற்ற பேர்களும், நிட்டையைப் பொருந்தாவிடில் செனனம் ஒழியாது; இங்ஙனஞ் சொன்னதெல்லாம் நீங்க எல்லாப்பற்றையும் விட்டு நிட்டையைப் பொருந்தினவர்களே பின்பு செனன மற்றவர்கள்" [1]என்பாரும்; "பேரின்பமாகிய முத்தியினை யடைந்தாரும் அதற்கு நேரே காரணமாகிய சமாதியை அடைந்தாரும் மெய்ப் பொருளினை ஒரு காலும் நீங்குதல் செய்யார், அவ்வாறு வாக்கிறக்கும்படி அதனைப்பற்றி நில்லாதாரும் பிறப்பினை அற்றவரென்றவாறு"[2] என்பாரும்; "பரமுத்தியையடைந்தாரும், அபர முத்தியைப் பெறுதற்குக் காரணமாகிய சமாதியை அடைந்தோரும், இடையறாத மௌன சமாதியை அடையாமல் (கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்னும்) ஞான நிலைகளையடைந்தோரும் பிறவிப்பிணியற்றவராவர்" [3]என்பாரும்; "அந்தப் பொருளைப் பொருந்தினேன் என்பவரும்,

---

[1] சிந்தனையுரை. [2] நிரம்ப அழகிய தேசிகர். [3] சு. சிவபாத சுந்தரம்.

அந்தப் பொருளைப் பெற்றேன் என்பவரும் அல்லாமல், எப்போதும் இந்த இரண்டுவிதப் பேச்சும் நீங்கிப் பற்றற்று நிற்பவர்களே சனன மரணம் நீங்கி நிட்டையைப் பொருந்திய ஞாதாக்கள்ஆவர்'' [4]என்பாரும் உளர்.

'ஓவார்' எனப் பாடங் கொள்வர் நிரம்ப அழகிய தேசிகர்.

77. பேய்ஒன்றும் தன்மை பிறக்கும் அளவும்
நீஒன்றும் செய்யாது நில்.

(தெ-ரை) பேய் பிடித்தவனுடைய தன்மை உனக்கு உண்டாகும் அளவும் நீ ஒன்றும் செய்யாமல் நிற்பாயாக என்பதாம்.

பேய் பிடித்தவன் தன்னறிவும் செயலுமின்றிப் பேயின் அறிவையும் செயலையும் கொண்டு நிற்றல் போலச், சிவத்தினுல் பிடிக்கப்பட்டுச் சிவானுபூதி பெற்று விளங்கு வாரும், சிவஞானமும் சிவன் செயலுமாகவே பெற்று விளங்குவர் என்பதாம்.

78. ஒண்பொருட்கண் உற்ருர்க்(கு) உறுபயனே அல்லாது
கண்படுப்போர் கைப்பொருள்போல் காண்.

(தெ-ரை) சிறந்த பொருளாகிய இறைவனைத் தமது நிட்டையால் கூடினவர்கள் அதனுலாய பேரின்பத்தையே அடைவர். அவர்தம் சமய ஒழுக்கங்கள் எல்லாம் தூங்குவார் தம் கைப் பொருள் போலத் தாமே விட்டகலும் என்பதாம்.

தூங்குவார்தம் கைப்பொருள் தாமே நழுவுவது போல, ஞானியர்க்கும் அவர்தம் சமய ஒழுக்கங்கள் தாமே அகலுவதல்லது தாமே அகற்றமாட்டார் என்பதாம். தாம் ஞானியரென்று கூறிக் கொண்டு சமய ஒழுக்கங்களைத் தாமே அகற்றி விடுபவர் ஞானியரல்லர் என்பதும் ஈண்டு கருதத்தக்கதாகும். இவ்வுண்மையை,

"ஞாலமதில் ஞானநிட்டை யுடையோ ருக்கு
நன்மையொடு தீமையிலை நாடுவதொன் றில்லைச்
சீலமிலைத் தவமில்லை விரதமொடாச் சிரமச்
செயலில்லைத் தியானமிலைச் சித்தமல மில்லைக்

[4] தே. ஆ. சீனிவாசன்.

கோலமிலைப் புலனில்லைக் கரண மில்லைக்
குணமில்லைக் குறியில்லைக் குலமு மில்லைப்
பாலருடன் உன்மத்தர் பசாசர்குண மருவிப்
பாடலினெ டாடலிவை பயின்றிடினும் பயில்வார்''
(சிவஞான சித்தியார்–284)

என்ற திருவாக்கும் விளக்கி நிற்றல் காண்க.

79. மூன்றாய தன்மையவர் தம்மின் மிகமுயங்கித்
தோன்றாத இன்பமதுஎன்? சொல்.

(தெ–ரை) உயிரும் சிவமும் பிரிப்பின்றி ஒன்றாய் நிற்பதால் காண்பவன், காட்சி, காட்சிப் பொருள் என்ற மூன்று தன்மையும் தோன்றாது நிற்கும்; அது பொழுது நிகழும் பேரின்பத்தை எங்ஙனம் கூறமுடியும்? முடியாது என்பதாம்.

ஒருவன் ஒரு நூலைக் காணின் காண்பவன் அவனாகின்றான்; அவனால் காணப்படும் பொருள் நூல் ஆகின்றது. அதனை நூல் எனக்காண்டல் அவனது காட்சியாகும். இம்மூன்றும் வெவ்வேறு பொருளாக இருக்கின்றன. ஆனால் உயிர் சிவத்துடன் ஒன்று பட்டு நிற்கும் முத்தி நிலையில் காண்பானும், அவனது காட்சியும், அவன் காணப்படும் பொருளும் சிவமேயாகும். ஆதலின் 'அவர் தம்மின் மிக முயங்குங்கால் மூன்றாய தன்மை தோன்றாது' என்றார். மூன்றாய தன்மை:- காண்பவன், காட்சி, காணப்படும் பொருள்.

"அறிவானும் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்றான் தானே – அறிகின்ற
மெய்ப்பொருளும் தானே விரிசுடர்பார் ஆகாசம்
அப்பொருளும் தானே அவன்." (11-ஆம் திருமுறை)

என்ற பாடலும் ஈண்டு நினைதற்குரியதாகும்.

'அதன் சொல்' எனப்பாடங்கொள்வர் சு. சிவபாதசுந்தரம் அவர்கள்.

80. இன்பில் இனிதென்றல் இன்(பு)உண்டேல் இன்றுண்டாம்
அன்பு நிலையே அது.

(தெ-ரை) எல்லா இன்பத்தினும் மேலாகிய பேரின்பத்தை அன்புண்டேல் இன்றே அடைந்து விடலாம்; அப்பேரின்பந் தானும் அவ்வன்பின் விளைவேயாகும் என்பதாம்.

இன்புண்டேல்-அன்புண்டேல் "அன்பும் சிவமும் இரண் டென்பர் அறிவிலார், அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்" என்ற திருமந்திரச் செய்யுளும் ஈண்டு நினைவு கூர்தற்குரிய தாகும்.

"இன்றுண்டேல் இன்றுண்டாம்" எனப்பாடங்கொள்வர் சிந்தனை யுரைகாரரும், நிரம்ப அழகிய தேசிகரும். "இன்புண் டேல் இன்புண்டாம்" எனப்பாடங்கொள்வர் தே.ஆ. சீனிவாசன் அவர்கள்.

(தொடரும்)

---

இராகம் : சுபபந்துவராளி தாளம் : ஆதி

பல்லவி

முருகா உன்னடி பணிந்தேனே
உருகாதோ உந்தன் உள்ளம் எந்தன்மேல் (முருகா)

அனுபல்லவி

திருமுரு காற்றுப்படை முதலோனே
கருணாகரனே கந்தனே சிவ (முருகா)

சரணம்

மாயப் ப்ரபஞ்சத்தில் மதிமயங்கி அலையும்
தீயகுணங்கள் கொண்டு கண்டபடி திரியும்
சேயனேனைத் திருத்தி நல்வழி புகுத்திட
காயம் கொடுத்த கந்தா தடுத்தாட் கொண்டிடு (முருகா)

வி. கே. முத்தையா பிள்ளை, பி. ஏ., பி. எல்.,
வண்ணார்பேட்டை, திருநெல்வேலி-3.

# கணக் கெழுதுபவர்

தேவாரமணி, திரு. சட்டையப்பன் அவர்கள்.
திருப்பனந்தாள்.



யார் இந்தக் கணக்கர்? எழுதாத கணக்கையெல்லாம் எழுதிப்பார்த்து எடை போடுபவர் இந்தக் கணக்கர்! இவர் எழுதுங் கணக்கிலே அடங்காதவரில்லை. "கணக்கு எழுதுவதா? கணக்கு வேலையா? அப்பப்பா! அது ஒரு தீராத தலைவலியா யிற்றே!" என்று அலுத்துக்கொண்டார் ஒரு கணக்கர். அவர், தினக் குறிப்பைச் சரியான முறையிலே அன்ருடம் எழுதி வைக் காத குறையினுல் ஏற்பட்ட திருகு வலி அது! ஒருநயா பைசாவா யிருந்தாலும் விடாமல் பக்குவப்படுத்தி அவ்வப்போது அதை எழுதி வைத்துக் கொண்டிருந்தால் அந்தத் தலைவலி வந்திருக்க ஞாயமில்லை. கையிலேயுள்ள பணம் விடை பெற்றுக் கொள் ளும் சந்தர்ப்பம் எப்போதென்ருல் சரியான கணக்கை எழுதி வராத சந்தர்ப்பம்தான்.

பல்வேறு தொழில்களிலே — துறைகளிலே கணக்கை எழுதிக்காலத்தை ஓட்டுகின்றவர்களையெல்லாம் எடை போட்டுப் பார்க்கும் எழுத்தாளர் – கணக்கர் ஒருவர் இருக்கிருர். அவர் 'வருமானவரி அதிகாரிக்கோ விற்பனை வரி அதிகாரிக்கோ அஞ்சி வாழ்பவரில்லை. எல்லா அதிகாரிகளின் கணக்கும் அவ ரிடம் இருக்கிறது. அந்தக் கணக்கர் யார் என்று கேட்பதை விட, அவர் என்ன செய்கிருர்? எப்படிக் கணக்கெழுதுகின்ருர்? என்பதை மட்டும் தெரிந்து கொள்வோம். எழுதியெழுதி ஏற்றம் காண்பதில் இனிமை; எண்ணி யெண்ணி இன்புறுவதிலே பெருமை. மனித இனத்திலே இன்று மாருத சங்கிலித் தொடர் களாகி விட்ட நிலை இது!

'ஆடித்திரியும் இளமை, அடங்கியிருக்கும் முதுமையை நோக்க வேண்டும்!'.

'பச்சைப் பசுந்தளிர்கள், நாளையது பட்டுப்போகும் சருகுகள்'

'வட்டவடிவமான மதி, அதுவும் நாளை தேயும்'

பட்டவை துளிர்க்கும்; தேய்ந்தது ஓயாது வளைவு பிறையாகி வளரும்.

கண்ணிலானந்த வெள்ளமதைக் கொட்டிய நன் மனமுடையோர் எத்தனை பேர்?

கையாரத்தொழுது, அருவிக்கண்ணூரச் சொறிந்த பாவாணர்கள் எத்தனை பேர்?

'இத்தனை, அத்தனை' என்று எழுதி – எண்ணிக்காட்ட இயலாதே!

கணக்குப்பட்டியல் உருவாகின்றது. வணங்குகின்றனர்; வாழ்த்துகின்றனர்; பூவால், நாவால் போற்றிப் புகழ்ந்து பொய் விட்டு மெய்யான பூசனை செய்கின்றனர்; நகமெல்லாம் தேயக் கையால் நன்மலர் தொடுத்து நனி சிறந்த திருத்தொண்டு செய்கின்றனர். முகமெல்லாம் கண்ணீர் மல்கும் இந்தப்பணிகளையெல்லாம் செய்யும் பத்தர்களின் பக்குவங்கண்ட அன்பர்கள் இதயங்கள் – கண்கள் மலர்கின்றன. மலராதனவெல்லாம் மங்குகின்றன, குவிகின்றன!

நினையாத நெஞ்சங்களும்–காணாத கண்களும் அதே நேரத்திலே உலவுகின்றன. நல்லார் அறஞ்சொல்ல, பொல்லார் புறங்கூறப்புதுமையான பல நடை–உடை பாவனையோடு பரம் பொருளைக் காண்பதிலே சின்ன முயற்சியைக்கூட எடுத்துக் கொள்ளாத நிலையிலே பொழுதைப்போக்கி வளர்ந்து வருகின்ற இளங்களையும் கண்டு இரங்குகின்றார். யார்? கணக்கர்! நல்லரசும், வல்லரசும் உள்ள இவ்வுலகிலே நாளும் நல்லதோர் எடை போட்டு நல்ல இனத்தையும், நாகரிக வாழ்வாளர்களையும் எழுதுகின்றார்.

எண்ணும் எழுத்தும் நாட்டின் இருகண்கள். அதனுல் ஏற்படுகின்ற அறிவுக்கண்ணே இங்கு கணக்கை எழுதும் கணக்கராக வருகின்ருர்.

வந்தவரை 'வரவேண்டும், வரவேண்டும்' என்று வரவேற்போம்!

ஆனுல் அவரை 'வரவேண்டும்!'என்று முன்னுல் விண்ணப்பம் – அழைப்பை அளிக்க வேண்டாமா? ஆம், நிச்சயமாக வேண்டும்!

சரி, அவரை எங்கே தேடுவது? 'தேடி, ஓடிப்பாடினுல் நாடி வந்து நம்முன் நிற்பார்'; யார் அவர்?

கணக் கெழுதும் ஈசன்!

இவர் இன்னம்பர் வாசி; எல்லாவுலகமும் ஆன ஈசனுர்.

இனியனுய் நிற்கும் இந்த இன்னம்பரான்றன் இணையடியை ஏத்துதற்குக் கும்பகோணத்திலிருந்து நேரே மேற்கில் மூன்ருவது கல்லிலுள்ள புளியஞ்சேரியை யடைந்து, அங்கிருந்து வடக்கே ஒரு கல்லில் உள்ள இன்னம்பரை யடையவேண்டும். கொட்டையூரிலிருந்து வடமேற்கே சென்ருல் ஒன்றரைக் கல். இது குறுக்குப்பாதை.

சின்னஞ்சிறிய கோயில்; அகத்திய முனிவர், ஐராவதம் பூசனே செய்த தலம் இது. தீர்த்தம், ஐராவததீர்த்தம். இறைவன் திருநாமம், எழுத்தறி நாதேசுரர்; அம்மையின் திருநாமம், கொந்தார் பூங்குழலம்மை. வெளிப்பிராகாரத்திலுள்ள அம்பிகையின் திருநாமம், சுகந்த குந்தளாம்பா.

"தொழுது தூமலர் தூவித் துதித்துநின்
றழுது காமுற் றரற்றுகின் ருரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதுங் கீழ்க்கணக் கின்னம்பர் ஈசனே" (அப்பர் சுவாமிகள்)

---

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 15, இதழ் 8-ன் தொடர்ச்சி]

## II

## THIRUNAVUKKARASU SWAMI

(More commonly referred to as APPARSWAMI)

47. இறுமாந்திருப்பன்கொலோ ஈசன்-பல்கணத்
தெண்ணப்பட்டுச்
சிறுமானேந்திதன்சேவடிக் கீழ்ச்சென்றங்
கிறுமாந்திருப்பன்கொலோ

47. How proud shall I be there,
One of His heavenly host,
At His fair feet who holds the deer,
How proud will be my boast!

48. தேடிக்கண்டுகொண்டேன்-திரு-மாலொடு
நான்முகனுந்
தேடித்தேடொணாத்தேவனையென்னுள்ளே
தேடிக்கண்டுகொண்டேன்.

48. I sought Him and I found.
Brahm sought in vain on high.
Vishnu delved vainly underground.
Him in my soul found I.

---

(தொடரும்)

# பரிபாடலில் பரங்குன்றம்

திரு. லெ. சங்கரகுற்ருலம் அவர்கள்
உப்பிலியப்பன் கோயில்.



பண் இசைத்துப்பாடிய பாவலர் பலர் வாழ்ந்த நாடு நம் பண்டைத் தமிழ்நாடு. தலே, இடை, கடை என முச்சங்கங்கள் வைத்து முத்தமிழ் வளர்த்தது நம் கன்னித்தமிழ்த் தாயகம். நாவலரும் பாவலரும் ஏன்? காவலரும் பாடிய பைந்தமிழ்ப் பாடல்கள் பலப்பல. தலேவனேயும், தலேவியையும் கண்டு பாடியவை, இறைவனே ஏத்திப்பாடியவை, யுத்தகளத்தில்-வீரர்களின் விழுப்புண்ணேப் பற்றிப் பாடிய பரணிபல, தாயகத்தின் தனிப் பெரும் சிறப்பைப் பாடியவை, மலே வளத்தையும், கலேக்களஞ்சியத்தையும், அரசனின் நீதி வழுவா நெறியினேயும், அவர்கள் அள்ளிக் கொடுத்த அறத்தின் திறத்தையும் இப்படி எத்தனே, எத்தனேயோ! வண்ணத்தமிழில் வடித்துள்ள பாடல்கள் எழுதினுல் ஏட்டில் அடங்கா! பாடிய பாடல்களில் செறிந்துள்ள கருத்துக்களோ எத்துணே இன்பம் நல்குகின்றன. என்னே அவர்களின் திறமை! பன்னிரு கரத்தவன் பாங்குடன் வதியும் மூவிரு படை வீட்டில் முதன்மையான பரங்குன்றத்தைப் பரி பாடலில் பார்த்தால் கோடி இன்பம் கிட்டுகிறது.

முதலில் இத் திருப்பரங்குன்றத்தின் அழகை அள்ளிப் பருகு முன் அது அமையப் பெற்றுள்ள திசை தெரிய வேண்டாவோ!

“மாடம் மலி மறுகில் கூடற் குடவயின்”

என்கிருர் நக்கீரர். மாடங்கள் மிக்க தெருக்களே யுடைய மதுரைக்கு மேற்கேயுள்ளதாம். இத் திருப்பரங்குன்றம்.

இவ்வாறு கூடலின் குடதிசையில் அமைந்த இத்திருப்பரங் குன்றத்திற்குச் செல்லும் வழியோ அம்மம்மா! கொள்ளை அழகு! என்னே அதன் வனப்பு! திருப்பரங்குன்றத்தின் மலை முடிகள் மிக உயரமானதாம்.

அவைகளில் காற்று மோதிச் செல்லுகின்றதாம். மழை மிகுதியாகப் பெய்வதால் மரங்களின் கிளைகள் யாவும் குளிர்ந் துள்ளனவாம். நீர்நிலைகள் நிரம்பி வழிகின்றனவாம். மருத நில மான படியிலே மணல் பரவிக்கிடக்கிறதாம். அம் மணலின் மேல் மரங்கள் பூத்துக்குலுங்கியதால் பாதை யாவும் பரவிக் கிடக்கிறதாம் மலர்கள். இம்மட்டோ! முருகனை வழிபடக் கன்னி யர்கள் வருகிறார்களாம். வெறுங்கையுடனா! அல்ல, அல்ல! நறுமணம் கமழும் பொருள்களுடனும், பூக்களுடனும், நந்தா விளக்குகள், மத்தளம், மணி ஆகியவற்றுடனும். இத்துணை அழகும் வனப்பும் வாய்ந்தது அவ்வழி. இதை....

"வளிபொரு சேண்சிமை வகையகத்தால்
தனிபெருகும் தண்சினைய
பொழில் கொளக் குறையா மலரக்
குளிர் பொய்கை அளறு நிறைய
மருதம் நளி மணல் ஞெமர்ந்த
நளி மலர்ப் பெருவழிச்
சீறடியவர் சாறுகொள எழுந்து
வேறுபடு சாந்தமும் வீறுபடு புகையும்
ஆறு செல்வளியின் அவியா விளக்கமும்
நாறுகமழ் வீயும் கூறுமிசை முழவமும்
மணியும், கயிறும், மயிலும் குடாரியும்
பிணிமுகம் உளப்படப் பிறவும் ஏந்தி
அருவரைச் சேராத் தொழுநர்;

என அழகாக நல்லந்துவனார் என்பவர் பாடியுள்ளார். இத்துணை அழகு கொழிக்கும் வழியே சென்று பரங்குன்றின் வளப்பத்தை யும், செழுமையையும் கண் கவர் காட்சியையும் கண்டு பருகக் கோடிக் கண் வேண்டுமோ எனத் தோன்றுகிறது.

திருப்பரங்குன்றத்துச் சுனைகளிலே விழுகின்ற அருவிகள் மாலைகளாகக் காட்சி தருகின்றனவாம். சுனைகளின் சிறப்பு இவ்வளவோ? ஆறுமுகன் அவதரித்த சிறப்புடைய சரவணப் பொய்கையில் உள்ள தாமரை மலர்களின் இதழ்கள் உதிர்வ தில்லையாம். அது மின்னல்போன்று பிரகாசிக்குமாம். அத்தகைய வனப்பும் ஒருங்கே அமையப் பெற்றனவாம் இப்பரங்குன்றத்துச் சுனைகள்.

"இமயக் குன்றினிற் சிறந்து
நின்ஈன்ற நிரையிதழ்த் தாமரை
மின்ஈன்ற விளங்கிணர் ஊழா
ஒருநிலைப் பொய்கையோ டொக்கும் நின்குன்றின்
அருவிதாழ் மாலைச்சுனை"

இத்துணைச் சிறப்புதானே என்று எண்ண வேண்டா. இதோ,

"முதல்வ!நின் யானை முழக்கம் கேட்ட
கதியிற்றே காரின் குரல்;

கார் மேகத்தில் எழும் இடியினைப் போன்று கம்பீரமாக முழக்கம் செய்கிறதாம் காங்கேயனின் யானை. யானையின் சத்தம் கேட்ட சேவல் வாளா இருக்குமோ? அதுவும் கூவுகிறதாம். எ ப் ப டி! பரங்குன்றிலுள்ள குன்றுகள் யாவும் அதிரும்படி கூவுகிறதாம்.

"குரல்கேட்ட கோழி குன்றதிரக் கூவ"

இத்துடன் நின்றுவிடவில்லை. யானையும், சேவலும் மாறி மாறிக் கூவ அவ்வொலி மலைக்குகைகளில் எதிரொலித்துக் கொண்டே இருக்கிறதாம்.

"மதநளிவாரணம் மாலுமாறு அதிர்ப்ப
எதிர்குதிர் ஆகின்று அதிர்பு மலைமுழை"

கொள்ளை இன்பம் தரவில்லையோ குன்றின் அழகு. பருகப் போதுமோ! போதாது. போதாது என்றால் இதோ பருகுங்கள் பரங்குன்றின் பான்மையை.

" தண்ணறுங் கடம்பின் கமழ்தாது ஊதும்
வண்ண வண்டு இமிர்குரல் பண்ணை போன்றனவே
அடியுறை மகளிர் ஆடும் தோளே
நெடுவரை அடுக்கத்து வேய்போன் றனவே;

கேசவனார் என்ற தமிழ்க் கவிஞர் தருகிறார் நமக்குப் பருக.

வண்டு தேன் உண்டு கொண்டிருக்கிறதாம் பூக்களில். பூ என்றால் அது பரங்குன்றத்துப் பூக்களல்லவா? அவ்விடத்து தலைவனுக்குகந்ததாக அல்லவோ இருத்தல் வேண்டும். ஆம்! ஆம்! அது கடம்பனின் மார்பை அழகு செய்யும் கடப்ப மலர்கள் தாம்! நறுமணம் கமழும் கடப்ப மலரின் தேனை உண்ணும் வண்டுகள் அமைதியுடனா உண்ணும்? களிப்பெய்தாதோ! ஆரவரிக்கின்றதாம்.

அவ் ஆரவாரம் பண்போன்று இனிமையாக உள்ளதாம். தொண்டு செய்யும் பெண்களின் தோள்கள் பரங்குன்றத்து மலைகளில் உள்ள மூங்கில்களை ஒத்து விளங்குகின்றனவாம்.

பரங்குன்றில் கோயில் கொண்டருளும் சரவணபவனைத் தெரிசனம் செய்யச் செல்லும் அடியவர் திருக்கூட்டமோ கணக்கிலடங்கா? கூட்டத்தில் வழி தவறுபவர்களும் உண்டு. இன்றும் காண்கிறோம். பெற்றோர்களைக் காணாத சிறுவன் அழுது கொண்டே இருக்கின்றான். "உரியவர்கள் வருக. அழைத்துச் செல்க" என்று திருவிழாக்களில் ஒலிப்பரப்பில் வரும் ஓசையைச் செவி மடுக்கிறோம் அல்லவா; அதுபோல் அன்றும் ஒருசிறு பெண், பெற்றவர்களை பிரிந்து வழி தவறிப்பெற்றவர்களைத் தேடுகின்றாள். பரங்குன்றத்து மலைகளில், பாறைகளில் தன் பெற்றவர்களை காணக்கிடைக்காத அப்பேதை உள்ளம் பொருமுகிறது. பெண்ணைப் பிரிந்த பெற்றவர்கள் வாளா இருப்பரோ? சப்தம் இட்டு கூவிக்கொண்டே செல்கின்றனராம். அவ் ஒலி குகைகளில் பட்டு எதிர் ஒலிக்கின்றதாம். பிரிந்த பேதை கேட்கிறாள் இவ் எதிர் ஒலியை. அய்யோ! எதிர் ஒலி எழுப்பிய குகையை யாண்டும் தேடுகிறாள்! காணாது கலங்குகின்றாள். இதை நப்பண்ணனார் என்னும் பாவலர் பண்ணிசையோடு பாடுகின்றார்.

"பிறந்த தமரின் பெயர்ந்தொரு பேதை
பிறங்கல் இடையிடைப்புக்குப் பிறழ்ந்தியான்
வந்த நெறியும் மறந்தேன் சிறந்தவர்
ஏஎ ஓஒ எனவிளி ஏற்பிக்க
ஏஎ ஓஒவென் றேலா அவ்விளி
அவ்விசை முழையேற் றழைப்ப அழைத்துழிச்
செல்குவ ளாங்குத் தமர்க்கா ணுமை
மீட்சியும் கூஉக் கூஉ மேவும் மடமைத்தே
வாழ்த் துவப்பான் குன்றின் வகை"

இத்தகைய செழிப்பும், அழகும், நிரம்பி வழியும் பரங்குன்றில் வீற்றிருக்கும் அக்கந்தனைக் கண்டு வழிபட வரும் திருக் கூட் டத்தில் கண்ணோட்டம் செலுத்தினால், கண்ணுதற் கடவுள், அவனை ஒத்த உருத்திரர்கள் பதினொருவர், மார்பில் திருமகளை உடைய துளப மாலை அணியும் திருமால், அயன், உலகத்து இருள் கடியும் ஆதித்தர் பன்னிருவர், மருந்து சொல்லும் மருத் துவர் இரண்டு பேர், வாரண வசுக்கள் எண்மர், எண்திசை காக்கும் திக்குபாலகர்கள் நாலிருவர் இன்னும் தேவர்களும், அவுணர்களும், வேதங்கள் கற்றுணர்ந்த மகரிஷிகள் இவ்வாறு பலரும் பரங்குன்றப் பரமனைக் காண வருகிறார்களாம்.

"மண்மிசை அவிழ்துழாய் மலர்தரு செல்வத்துப்
புண்மிசைக் கொடியோனும் புங்கவம் ஊர்வோனும்
மலர்மிசை முதல்வனும் மற்றவ னிடைத்தோன்றி
உலகினுன் அகற்றிய பதின்மரும் இருவரும்
மருந்துரை இருவரும் திருந்துநூல் எண்மரும்
ஆதிரை முதல்வனிற் கிளந்த
நாதர்பன் னொருவரும் நன்திசை காப்போரும்
யாவரும் பிறரும் அமரரும் அவுணரும்
மேவரு முதுமொழி விழுத்தவ முதல்வரும்
பற்றுகின்றநின் காரண மாகப்
பரங்குன்று இமயக் குன்றம் நிகர்க்கும்.

இவர்கள் யாவரும் வழிபட வருகின்ற காரணத்தால் அவர்கள் வாழும் இமய மலையின் சிறப்பையும் உடையதாம் திருப்பரங்குன்றம். நாமும் செல்ல வேண்டாவோ. சென்று வரம்பல கேட்க வேண்டாவோ! யாது வரம் கேட்பது? இதோ நல்லச் சுதனுர் எதனை கேட்கிருரோ அதனையே நாமும் கேட்போமாக.

"மாறமர் அட்டவை மறவேல் பெயர்ப்பவை
ஆறிரு தோளவை அறுமுகம் விரித்தவை
நன்றமர் கயமொடு ஒடுங்கு நின்அடியுறை
இன்றுபோல் இயைகெனப் பரவுதும்
ஒன்னர்த் தேய்த்த செல்வ! நின்தொழுதே"

---

மதிப்புரை :

# சைவ சித்தாந்தம்



ஆசிரியர் :
உயர்திரு. D. இராமாநுசாசாரியார் அவர்கள்
தத்துவத் துறைப் பேராசிரியர்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலைநகர்.

இதன்கண் திருப்பனந்தாள் காசிமடத்து அறக் கட்டளையின் சார்பில், காசி, அலகாபாத் பல்கலைக் கழகங்களில் பேராசிரியர் இராமாநுசாசாரியார் அவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவுகள் திருத்த முறப் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. பேராசிரியர் அவர்களது ஆழ்ந்த பேரறிவும், அனுபவமும், தத்துவ நூற்கருத்துக்களை ஏனையோர் உளங்கொள இனி தெடுத்துரைக்கும் ஆற்றலும் நூலின் எம்மருங்கும் காணப்படுகின்றன. தென்னகத்து மக்களின் அன்பையும் கருத்தையும் ஈர்த்துப் பன்னெடுங் காலமாக அவர்கள் இதயத்தில் எழிலுடன் வீற்றிருந்து அரசோச்சி வரும் சைவ சித்தாந்த நெறி எவ்வகை வேறுபாடுகளையும் மனித சமுதாயத்திலிருந்து அறவே அகற்றி அவர்களை ஆன்ம நேய ஒருமைப்பாட்டோடு திகழும் வண்ணம் இணைக்க வல்ல பேராற்ற லாகும். இதன் பல்வேறு நுணுக்கங்களையும் திறம்பட இந்நூலில் ஆசிரியர் அவர்கள் எடுத்துரைத்துள்ளார்கள். குறுகிய கால அளவில் விரைந்து படித்து நல்ல சித்தாந்த அறிவைப் பெறுதற்கு இந்நூல் தக்கதொரு துணையாகத் திகழ்கின்றது. சித்தாந்தச் செல்வர்களும், தத்துவ ஆர்வலர்களும், ஏனையோரும் இதனை வாங்கிப் படித்து பயன் பெறுவார்களாக.

விலை ரூ. 3-00.

---

கிடைக்கும் இடம் :

திரு. கோ. நா. சீநிவாசன்,
24, சின்னக்கடைத் தெரு,
திருச்சிராப்பள்ளி.

# அருள் நூலும் அகப்பொருளும்

திரு. A. C. ஷண்முக நயினர் அவர்கள்,
அட்வகேட், தென்காசி.

[மலர் 15. இதழ் 8-ன் தொடர்ச்சி]

**வே**றுசில துறைகள்:- அறம்பொருள் இன்பங் காரண மாகத் தலைமகன் தலைமகளை விட்டுப் பிரிகின்றான். அவன் வரவை எதிர்பார்த்துக்கொண்டேயிருக்கின்றாள் தலைமகள். விடிந்தது. பகல் கழிந்தது. மாலைவந்தது. காதல் நோய் மிகுந்து கொண்டே வருகின்றது. தாங்கமுடியவில்லை. மாலை வரவு நிலவின் வரவுக்கும் நள்ளிரவு வருதற்கும் அறிகுறியல்லவா? ஆவலாய் எதிர்பார்க்கின்றாள் தலைமகள். மனத்துள்ளவரே, தலையால் வந்திக்கப் பெற்றவரே, இனிய சொல்லையுடையவரே. மாலை வரும்போது என் மனத்தில் நீங்காதவரே, இளைஞரே அழகரே என்று பலவாறு மனதில் புலப்பம் ஏற்படுகின்றது. திரு ஞான சம்பந்தர் மாலைப்பொழுதை ஒரு பாட்டில் அமைக்கின்றார்.

"சிந்தை யிடையார் தலையின் மிசையார் செஞ்சொல்லார்
வந்து மாலை வைகும் போழ்தென் மனத்துள்ளார்
மைந்தர் மணாள வென்ன மகிழ்வா ரூர்போலும்
பைந்தண் மாதவி சோலை சூழ்ந்த பாசூரே."

இப்பாடலில் தலைமகனை மாலைப்பொழுதில் எதிர்பார்ப்பதும் எதிர் கொண்டழைக்கும் அன்புச் சொற்களும் நினைவு கூர்தலும் காணலாம்.

மாலைப்பொழுது காதல் நோய் உறுத்துங் காலம் என்று பொருள் படும்படி சிலப்பதிகாரத்தில் "கூடினார் பால் நிழலாய் கூடார்பால் வெய்யதாய் காவலன் வெண் குடை போற் காட் டிற்றே-கூடிய-மாதவிக்குங்கண்ணகிக்கும் வானூர் மதிபிரிந்து-போதவிழ்க்குங் கங்குற்போது" என்று சுவைபடக்கூறப்பட் டிருக்கின்றது. மாலைகழியவும் நிலவு தோன்றுகின்றது. தலைவன் வரவில்லை. அவன்உறுப்பு நலன்களை நினைந்து, நினைந்துநிலவை நிந்திக்கின்றாள்.

"தேய்ந்து மெய்வெளுத்து அகம்வளைந்து
அரவினையஞ் சித்தானிருந் தேயுங்
காய்ந்து வந்துஎன்றனை வலிசெய்து
கதிர்நிலா எரிதூவும்
ஆய்ந்த நான்மறை அந்தணர்
தில்லையுள் அம்பலத்து அரன்ஆடல்
வாய்ந்த மாமலர்ப் பாதங்கள்
காண்பதோர் மனத்தினை யுடையேற்கே."

என்றார், திருவிசைப்பா இசைத்த திருவாலி யமுதனார்.

மெலிந்து உடல் வெளுத்து நேரேயிருக்க முடியாமல் வளைந்து இறைவனணிந்திருக்கும் பாம்புக்கஞ்சித் தனியே விலகியிருக்கும் நிலாவே, உனக்கு இவ்வளவு ஆணவமா? இப்படி மெலிந்து பயந்திருந்தும் நீ கோபித்து வந்து என்னைத் துன்புறுத்தி நெருப்பை வீசுகின்றாய் (எரிக்கின்றாய்) என்று நிலவை அவள் ஏசுகின்றாள். தலைவன் பிரிவாற்றாமையால் இருக்கும் தில்லைச் சிறப்பையும் அவன் ஆடும் இடமாகிய அம்பலத்தையும் அவன் ஆடுஞ் செயலையும் மலர் போன்ற பாதங்கள் என்று உறுப்பு நலனையும் உன்னி உருகுகின்றாள். இப்படி நினைந்து உருகுவது உத்தமப் பெண்களின் இயல்பு. சானகி அசோக வனத்தில் சிறையிருந்தபோது தன் தலைவனாகிய ஸ்ரீ ராகவன் உறுப்பு நலன்கள் செயல்களை நினைந்து உருகுவதைக் கம்பர் காட்சிப் படலத்தில் கூறியிருப்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளலாம்.

இன்னும் வரவில்லை தலைமகன். மிக ஆசை. இந்த ஆசை தலைமகளுக்கு வெறுப்பை உண்டாக்குகின்றது: ஏசுகின்றாள் தலைமகனை. அன்பு ஏச்சு. செல்லங்கொழிக்கும் செஞ்சொற்கள்.

"உள்ளே உருகிநைவேனை உளளோ இலளோ என்னக்
கொள்ளை கொள்ளிக்குறும்பனை கோவர்த்தனனைக் கண்டக்கால்
கொள்ளும் பயன்ஒன்றில்லாத கொங்கை தன்னைக்கிழங்கோடும்
அள்ளும்பறித்திட்டவன்மார்பில்எறிந்தென் அழலைத்தீர்வேனே."

யென்பது சூடிக் கொடுத்த நாச்சியார் பாடல் ஆகும். இதில் கொள்ளை கொள்ளிக்குறும்பன் என்ற ஏச்சின் நயத்தை

யும் அவன் மார்பில் எறிந்தென் அழலைதீர்வேனே என்று ஆத்திரத்தையுணர்த்தும் பான்மையையும் நன்கு அநுபவிக்கலாம். மனம் உருகுகின்றது. இருக்கின்ருளா அல்லது இறந்தாளா என்று கூடக் கவனியாமல் என்னுடைய நினைவையெல்லாம் கொள்ளை கொண்ட கோவர்த்தனன் என்னைப் புறக்கணிக்கின்ருன். அவன் வரட்டும். என் தாபந்தீர்க்க என்ன செய்கின்றேன்பார், என்று சபதம் கூறும் உறுதியைக் கண்டு களிக்கின்ரேம்.

வேருெரு இடத்தில் தலைவி தலைவனை நினைந்து தூங்கி விட்டாள். தூக்கத்தில் ஓர் இன்பக் கனவு,

"மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாம நிரைதாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதனன் வந்துஎன்னைக்
கைத்தலம் பற்றக் கனக்கண்டேன் தோழீநான்"

என்று மறு நாட்காலைத் தன் தோழியிடம் கூறித் தன் காதலை வெளிப்படுத்துகின்ருள்.

திருநாவுக்கரசர் முற்றுந்துறந்த முனிவர். அரம்பையர் ஆடல் பாடல்களில் மயங்காதவர். பொன்னையும் மாணிக்கங்களையும் மதிக்காது விசி எறிபவர். இவர் காதல் வசப்பட்டார் என்ருல் என்ன சொல்லுவது? என்ன காதல்? இறைவன் காதல். ஓர் நாடகமோ அல்லது கதையோ இதன் வாயிலாகத் தன் காதலை வெளியிடுகின்ருர். ஓர் பிச்சைக்காரன் விட்டு வாசலில் பிச்சை கேட்டு வந்து நிற்கின்ருன். பிச்சை கொண்டு வருகின்றேன் என்று விட்டுக்குட் சென்று பிச்சை கொண்டு வந்தேன். பிச்சையை ஏற்காமல் அப்படியே நிற்கின்ருன். இம்மட்டோ! என்னை நெருங்கி வருவது போலச் சாடையும் காட்டினுன். யார் ஐயா நீர்? எந்த ஊர்? எங்கே வந்தீர் என்று அதட்டினேன். அவன் ஒன்றுஞ் சொல்லாமலிருந்து விட்டான் என்கிருர் பிச்சைக்காரன் யார்? வெண்காட்டு அடிகள்.

இது சிறுகதையா? சிறிய நாடகமா? எதாயினும் படிக்க, பாட, சிந்திக்க இனிமை தருகின்றது.

"நென்னலையோர் ஓடேந்திப் பிச்சைக் கென்று
வந்தார்க்கு வந்தேனென்று இல்புக்கேன்
அந்நிலையே நிற்கின்ருர் ஐயங் கொள்ளார்
அருகே வருவார்போல் நோக்கு கின்ருர்
நுந்நிலைமை யேதோநும் முர்தான் ஏதோ?
என்றேனுக் கொன்ருகச் சொல்ல மாட்டார்
மென்முலையார் கூடி விரும்பி யாடும்
வெண்காடு மேவிய விகிர்த ஞரே

காதலர் வராமையால் தூதுவிட்டுத் தன் காதலை வெளிப்படுத்து கின்ருள். தாமரையின் தேனைக்குடித்துப் பெடையோடிருந்து ரீங்காரம் செய்யும் அரச வண்டே, என் நிலைமையைப்பார். நான் காதல் நோயால் வருந்துகின்றேன். நீ என் காதலரிடம் தூது சென்று அவருக்கு என்னுடைய நிலைமையை உணர்த்தமாட் டாயா? அவர் சீர்காழியிலிருக்கின்ருர். தயவுசெய்.

"வண்டரங்கப் புனற்கமல மதுமாந்திப் பெடையினெடும்
ஒண்டரங்க இசைபாடும் அளியரசே யொளிர்மதியத்
துண்டரங்கப் பூண்மார்பர் திருத்தோணி புரத்துறையும்
பண்டரங்கர்க் கென்னிலைமை பரிந்தொருகாற் பேசாயே"

என்று வண்டைக் கெஞ்சுகின்ருர், தலைமகளாகிய ஞான சம் பந்தர். கிளியையும் பார்த்து, நீயுண்ணப்பால் தருவேன் தூது சென்று என் நிலைமையை அறிவிப்பாய் என்கிருர். இவ்வாறு பறவைகளைத் தூதுவிட்டுத் தங்கள் காதலை வெளியிடுகின் ருர்கள். நாவுக்கரசர் குயிலையும், சுந்தரர் திருமங்கையாழ்வார் நாரையையும், மணிவாசகர் தும்பியையும் தூதுவிடுகின்றனர்.

காதல் வசப்பட்ட தலைமகளை இவ்வாறு விளக்குகின்ருர் மணிவாசகர்.

காலை, பகல், மாலை, நள்ளிரவு முதலிய ஒவ்வொரு காலத் திலும எம்பெருமானே என்றென்று நம்பெருமான் சீரைப்பாடு வதில் ஓயமாட்டாள்- மிகுந்த மனக்கழிப்புடன் தாரை தாரை யாக அழுவாள். தரையில் விழுந்து கும்பிடுவாள். காதலாகிக்

கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார் தமைப் பித்தராக்கி நன்னெறிக் குய்த்து ஆட்கொள்ளும் பெருமானையன்றி வேறு ஒரு தேவரையும் வணங்க மாட்டாள்.

பேரரசு ஆகிய சிவபெருமானிடம் பித்துக்கொண்டவர்கள் இப்படித்தான் ஆவார்களோ? கச்சையும் பூணையும் அணிந்த நகிலுடையவரே இவ்வாறு செய்து ஆட்கொள்ளும் வித்தகர் யாவரோ அவர் திருவடிகளை வாயார நாம் பாடி இந்த அழகிய மடுவில் பாய்ந்து விளையாடுவோம் என்று பாடுகிருள்.

"ஒரொருகால் எம்பெருமான் என்றென்றே நம்பெருமான்
சீரொருகால் வாயோவாள் சித்தங் களிகூற
நீரொருகால் ஓவா நெடுந்தாரை கண்பனிப்பப்
பாரொருகால் வந்தனையாள் விண்ணோரைத் தான்பணியாள்
பேரரையர்க் கிங்ஙனே பித்தொருவர் ஆமாறும்
ஆரொருவர் இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர்தாள்
வாருருவப் பூண்முலையீர் வாயார நாம்பாடி
ஏருருவப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய்"

*திருவெம்பாவை.*

இறைவன்பால் காதல் எவ்வாறு என்பதை நாவுக்கரசு விளக்குகின்ருர்.

"முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்
மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னை யவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானுள்
அன்னையையும் அத்தனையும் அன்றேநீத்தாள்
அகன்ருள் அகலிடத்தார் ஆசாரத்தை
தன்னைமறந்தாள் தன்னுமங் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன்தாளே."

இதில் காதல் கொள்ளல், வளர்ச்சி, தன்மை இறுதிப்பயன் எல்லாம் திரட்டி ஓர் அமிழ்தமாகக் கொடுத்திருக்கின்ருர் அப்பர் சுவாமிகள். இதில் அடங்காத அகப்பொருள் ஒன்றுமில்லை.

இவ்விதமாகக் கற்புடைய மகளிரும் இறைவனையடைய விரும்பும் ஓர் உயிரும் ஒருதன்மைத்தாகின்றனர். இறுதியில் இருவரும் அடைவது இன்பம். மகளிர் அடைவது சிற்றின்பம். உயிர்கள் அடைவது பேரின்பம். இந்தப் பேரின்பத்தின் தன்மையைப் பாங்கி நற்றுய்க்கு அறிவிக்கின்றுள். தலைவன் தலைவியாகிய இருவரால் நுகரப்படும் இன்பமானது ஆனந்த வெள்ளத்தில் முழ்கப் புகும் ஓர் உயிரானது ஒருடம்பாற்றுய்த்தல் போதாமையால் இரண்டு உடம்பைக்கொண்டு அவ்வின்ப வெள்ளத்திடைக் கிடந்து திளைத்ததனேடு ஒக்கும். அதுவுமன்றி இன்ப வெள்ளத்தைச் செய்யும் அம்பலத்தில் நடம் செய்யும் ஒலிக்கும் வீரக்கழலைத் தரித்த நடராஜப்பெருமானுடைய திருவருளைப் பெற்றவர் இன்பம் போல இவ்வின்ப வெள்ளம் ஒருகாலத்தும் குறைவுபடாது முடிவடையாது. இவ்வழகிய நலம் முடிவடையாது.

"ஆனந்த வெள்ளத்தழுந்துமொர் ஆருயிர் ஈருருக்கொண்டு
ஆனந்த வெள்ளத்திடைத்திளைத்தாலொக்கும் அம்பலஞ்சேர்
ஆனந்தவெள்ளத் தழைகழலோனருள் பெற்றவரின்
ஆனந்தவெள்ளம் வற்றுதுமுற்றுது இவ்வணிநலமே"

இதுவே பேரின்ப நிலை. சைவ சமயம் போதிக்கும் இறுதியும் உறுதியும் உள்ள நிலை. உயிர்கள் பிறவிப்பெருங்கடல் நீந்திக் கரை சேர்ந்தடையும் நிலை. இந்நிலையை யடைவது உயிரின் கடமை.

இங்கே அகப்பொருளும் அருட்டிறமும் ஒன்றி விடுகின்றன.

முற்றும்.



# தாயுமானவரின் – பராபரக்கண்ணிகள்

Couplets in venerable adoration of the
Omnipotent and Omnipresent

sung by

St. THAYUMANAVAR

13

God is Omnipresent. In one way or other, the Supreme Self is manifested in all animate and inanimate beings. Those who have attained self-realisation perceive this feature of his all-pervasiveness in all places and things. St. Appar saw the Suprene sight of Arthanarisvara in the natural scenery of Tiruvaiyaru. Our poet saint Thayumanavar, one among the descendents of that great tradition says in the following couplet, that he has seen the Lord's existence every where, as the primal factor.

எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய்
அங்கங் கிருப்பதுநீ அன்றோ பராபரமே!

(பொ – ரை): எவ்விடத்து நோக்கினும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய் எத்தகைய உயிர்களிடத்தும் அவ்வுயிராக இருப்பது தேவரீர் அல்லவோ.

Oh........ Lord Supreme! wherever I turn my eyes, I perceive 'You' inseparably existing in all beings as the primal factor.

———

(தொடரும்)

Translated by Sri. K. PALANISAMY, M.A., Lecturer in Tamil, Sri. K. G. S. Arts College, Arulnandi Nagar.

# கம்பன் கண்ட அரசும் அரசனும்

வித்வான். திரு. வெ. சுப்பிரமணியன் அவர்கள்,
தமிழாசிரியர், ஸ்ரீ வெங்கிட கிருஷ்ண உயர்நிலைப் பள்ளி,
கணியூர், கோவை. மாவட்டம்.



அறிவும், பண்பும், நாகரிகமும் வாய்ந்த குடிமக்கள் நிறைந்த நாடே நல்ல நாடாகும். அத்தகைய மக்களைப் பெற்ற நாடு வளங்கொழிக்கும் நாடாக இருப்பினும் காடாக இருப்பினும் பள்ளமாக இருப்பினும் மேடாக இருப்பினும் அங்குத் துன்பம் இல்லையாம். "எங்கு மக்கள் நல்லவர்களாக இருக்கிறார்களோ அந்த நாடுதான் நல்ல நாடாகும்" என்பது ஆன்றோர் ஆய்ந்துணர்ந்த உண்மையாகும்.

" நாடாக ஒன்றோ காடாக ஒன்றோ
அவலாக ஒன்றோ மிசையாக ஒன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே',

என்ற ஔவையார் வாக்கானும் இதை அறியலாம். இத்தகைய நல்ல குடிமக்களையுடைய நல்ல நாட்டினை ஆளும் அரசனுக்கு நிறையன்றிக் குறையுண்டோ?

## அமைச்சர் இயல்பு:

பெருஞ்சிறப்பையுடைய அயோத்தியை அரசிருக்கையாகக் கொண்டு நல்ல நாடாகிய கோசல நாட்டினை ஆண்டு வந்தான் தசரத மன்னன். அவன் அரசியலை நன்கு செலுத்த அமைச்சர்கள் அறுபதினாயிரவரைக் கொண்டிருந்தான். அவ்வமைச்சர்கள் பல கலைகளைக் கற்றுணர்ந்ததோடு அமையாது கலைவல்லார் பலர் கூறக்கேட்ட கேள்வியறிவினையும் யுடையவர்கள். "மந்திரிக்கழகு வரும் பொருள் உரைத்தல்" என்ற

முதுரைக்கு ஏற்ப நிகழ்ந்ததொரு செயலைக் கொண்டு மேல் நிகழவிருக்கும் செயலை ஆய்ந்துணர்ந்து கூறும் திறமுடையார். அரசனுக்கு ஊழ்வினையால் தீங்கு விளையினும் அதனையும் மாற்றி யொழிக்கும் வலியுடையார். அரசியலறிவு நூல்களை ஐயந்திரிபறக் கற்றுணர்ந்தவர்கள். ஒழுக்கந்தவரு உத்த மர்கள். நடுநிலை பிறழாத தன்மையர். யாவருக்கும் புகழைத் தரும் புனிதமான வினைகளையே புரிவர்.

அவ்வமைச்சர்கள் அறுபதினுயிரவரும் தம் மன்னனுக்கு நலம் பயக்கும் உண்மைகளை எடுத்துரைப்பதிலும் இடித்துரைப் பதிலும் அஞ்சாதவர்கள். அரசன் சினந்து கூறினும் அவ் வெம்மையைத் தாங்கிக் கொண்டு நீதியை விடாது நின்றுரைப் பார்கள். அரசனால் தம்முயிர்க்கு முடிவு வரினும் உண்மையை உரைப்பதில் தயங்க மாட்டார்கள். செங்கோன்மையில் சிறிதும் பிறழாத உள்ளமுடையவர்கள். முக்காலமும் உணரவல்ல முதறி ஞர்கள். அவர்கள் அறுபதினுயிரம் பேர்களாயினும் அரசனுக்கு உறுதி கூறுவதில் ஒருவரைப் போலவே அனைவரும் ஒரே கருத்தை ஒற்றுமையாக நின்று ஒருவரே போன்று உரைப் பார்கள்.

“தம்முயிர்க்(கு) இறுதிஎண்ணார் தலைமகன் வெகுண்டபோதும்
வெம்மையைத் தாங்கி நீதிவிடாது நின்றுரைக்கும்வீரர்
செம்மையின் திறம்பல் செல்லாத்தோற்றத்தால் தெரியும்காலம்
மும்மையும் உணரவல்லார் ஒருமையே மொழியும்நீரார்”

என்று கம்பர் அவரது அரும்பண்புகளைக் கூறியுள்ளார்.

அரசு முறை:

அமைச்சர்களாலும், நாட்டு மக்களாலும் சிறப்புற்று விளங்கிய தசரத மன்னனுடைய அரசியலையும் அவனது அரிய பண்புகளையும் இனிக்காண்போம். தன்னாலும், தன்னைச் சார்ந்த வர்களாலும், பகைவர்களாலும், கள்வராலும் கொடிய விலங்கு களாலும் ஏற்படும் ஐவகைப் பயங்களைப் போக்கி அறத்தொடு காத்தவன் அவன். இதனால் பல சட்ட திட்டங்களை உருவாக் கினான் அவன். அச்சட்ட திட்டங்கள் அமைச்சர்களாலும், அறிஞர்களாலும் ஆய்ந்துணர்ந்து அமைக்கப்பட்டனவாம்.

மேலும் அவை அறத்தை அடிப்படையாகக் கொண்டு இயற்றப் பட்டனவாகும். காலத்திற்கு ஏற்ப அறத்தை அடிக்களனுகக் கொண்ட சட்டங்களே இயற்ற அவ்வக்கால நாட்டிற்கு ஏற்ற மரபுகளே அரசன் அறிந்திருக்க வேண்டும். அஃது முறையறித லாகும். அத்தகைய முறைமையினே அறிந்திருந்தான் தசரதன். அவன் தன்னேப்பற்றியோ தன்னலத்தைப் பற்றியோ நினேக்காது நாட்டின் நலத்தையே அல்லும் பகலும் இடைவிடாது நினேத் திருந்தான். அவன் தன்னலத்தைக் கருதாதவனுய் இருந்தமை யால் அவாவை நீக்கியவனுன். கோபமானது தனக்கும் பிறருக் தீங்கிழைக்கக் கூடியது. ஆனுல் பலருடைய நலனேக் காக்கக் கருதும் அரசன் அப்பலருடைய நலனுக்கு இடையூறு விளேக்கும் சிலரை அரசன் கோபிக்க வேண்டிவரும். தசரதனும் அம்மாதிரி யான சமயங்களில் கோபித்தும் வந்தான். நாட்டின் நலனேக் காக்கப் பொருள் வேண்டும். அப்பொருளே அரசன் குடிமக்களிடமிருந்து வரியாகப் பெறவேண்டும். அப்பொருளே வரியாகப் பெறுவதிலும் பொருளாசையின்றிப் பெறவேண்டும். பொருளாசையானது எளிதில் விடக்கூடியது ஒன்று அன்று. அரசன் செலவிடும் வழிகள், மக்களின் கொடுக்கும் சக்தி ஆகியவற்றை அறிந்தே வரிவாங்க வேண்டும். இவற்றையெல் லாம் நன்கு அறிந்தே தயரதன் மக்களிடத்தில் வரிவாங்கினுன். அனேத்துயிர்களிடத்திலும் இரக்கங் கொண்டு தண்ணளி செய்யும் தன்மையனுமாவான். இவனது புகழோ இவ்வுலகில் அன்றி எல்லாவுலகிலும் பரவியிருந்தது. சம்பராசுரப் போரில் தேவேந்திரனுக்கே உதவி அவனது பாராட்டுதலேயும் பெற்ற வன் தயரதன் என்ருல் அவனது புகழுக்கு எல்லே யுண்டாமோ?

"முறை அறிந்து அவாவைநீக்கி முனிவுழிமுனிந்து வெஃகும்
இறைஅறிந்து உயிர்க்கு நல்கும்இசை கெழுவேந்தன்"

தயரத மன்னனுக்கு உலகில் எங்கும் பகைவரே யில்லே.பகைவர் இல்லேயென்ருலும் நல்லாட்சியைச் செய்தான் தயரத மன்னன். அதற்குக் காரணம் அவனுடைய பண்புடைமை தவிர வேறு யாதாயிருக்க முடியும்? உழவன் ஒருவன் தனது மிகச் சிறிய அளவுள்ள ஒரு செய்நிலத்தைக் கண்ணுங் கருத்துமாக நன்கு உழுது உரமிட்டு விதை விதைத்து நீர்பாய்ச்சிக் களே எடுத்துப்

பாதுகாத்து வருவானே, அஃதே போல் தயரதனும் தன் நாட்டைப் புரந்து வந்தான். வறிஞனாகிய உழவன் தன் வாழ்வுக்கு இந்தச்சிறிய நன்செய் நிலத்தை யன்றி வேறு பெற்றிலன். எனவே அவன் எவ்வளவு முயன்று அந்நிலத்தைப் பாதுகாப்பான் என்பது வெள்ளிடைமலை. நிலத்தை நன்கு பண்படுத்திப் பயிர் விளைக்காவிடில் அதனால் விளையும் தீமை ஏழை உழவனுக்கே யன்றி நிலத்திற்கில்லை. அந்தத் தீமையானது தனியொருவனாகிய அவனுக்கே யாம். ஆனால் அரசன் செய்யுந் தீமையானது அவனோடன்றி அவன் நாட்டில் உள்ள மக்கள் யாவருக்குமாம். அதனால் தயரதன் பிறர் பெறுந்துயரைத் தன்னதாகவே நினைத்து வருந்தினான். நாட்டை நன்கு காவா விடில் வரும் துன்பத்தை மன்னன் மக்களைவிட நன்றாக அறிந்திருந்தான். எனவே ஏழை உழவனுக்கு உவமையாகத் தயரதனையும் நிலத்துக்கு உவமையாக அவனது நாட்டையும் பொருந்தக் கூறினார் கம்பர்.

"வையகம் முழுவதும் வறிஞன் ஓம்புமோர்
செய்யெனக் காத்து இனிது அரசு செய்கின்றான்"

பண்புகள்:

இவ்வுலகில் தாயன்பிலும் மேலானதொரு அன்பு இல்லை. தன்னலமற்றது தாயன்பு. தம் மக்கள் கேளாமலே அவர்களுக்குத் தேவையான வற்றைக் காலமறிந்து செய்யுந் தன்மையள் தாய். அஃதே போன்று தயரதனும் தம் நாட்டு மக்களிடத்தில் தாயன்பு கொண்டு அவர்கள் கேளாமலே அவர்கட்கு வேண்டுவன வற்றைத் தக்க காலமறிந்து செய்து வந்தான். இதனால் இவன் மக்களிடத்தில் அன்பு செலுத்தலில் தாய் போன்று விளங்கினான். இதனாலன்றோ கம்பன் தசரத மன்னனைத் "தாயொக்கும் அன்பில்"என்று கூறினான். தவமானது நன்மையையே அருளும். ஒருவனுக்கு நற்பேறு வாய்க்குமானால் அது நற்றவத்தினாலாயதே யாகும். தயரதனும் குடிமக்களுக்கு நாளும் நலஞ்செய்வதனால் அவர்கள் செய்த தவ மாவான். இம்மைக்கும் மறுமைக்கும் நற்றுணையாவான் மைந்தன். இம்மையில் செய்யும் அறமானது மறுமைக்கே பயன் தரும். ஆனால் மகனே இம்மை மறுமைக்கு உதவுவான் என்பது அற

நூலுண்மை. தயரத மன்னன் மக்களுக்கு முன்னின்று அவர்களை நல்வழியில் செலுத்துகின்றான். ஆதலின் அவர்களுக்கு மகன் போல்வானு மாவான். அவன் காட்டும் அறநெறியானது அம் மக்களுக்கு இம்மை மறுமை ஆகிய இரண்டிற்கும் பயன் படுவ தாய் அமைந்துள்ளது. குற்றம் புரிந்தோரைத்தண்டிப்பதில் நோய் போன்றவனுமாவான். நோயானது ஆற்றொணுத் துன் பத்தைத் தரும். அதுபோன்று குற்றம் புரிந்தோரைத் தண்டிப் பான். யாவர்க்கும் இரங்கி அருள் புரிவனுதலின் மருந்தும் போல்வான். மன்னன் தசரதன் அறநூல்களையும், அரசியல் நூல்களையும் ஆராய்ந்து அறிந்த அறிவினை யுடையவன். கணக்கில்லாத சிறந்த அறிவு நூல்களையும் கசடறக் கற்றவன். இதனைக் கம்பன் ''எண்ணில் நன்னூல் ஆய்ந்தே கடந்தான் அறிவென்னும் அளக்கர்'' என்பதால் தெரியப்படுத்தியுள்ளான். அத்தகைய நுண்ணறிவால் இது நன்று, இதுதீது என்று பகுத்தறிந்த மக்களுக்கு நலஞ்செய்தான் மன்னன். பொதுவாக நன்மையைச் செய்வதிலும் தவறுண்டாகும் என்றறிந்து அவரவர்களுடைய தேவைக்கேற்ற நன்மைகளையே செய்துவந்தான் அவன். ஆதலால் அம்மக்களின் அறிவாக விளங்கினுன்மன்னன் தசரதன்.

"தாய்ஒக்கும் அன்பில்: தவம்ஒக்கும் நலம்பயப்பில்
சேய்ஒக்கும் முன்னின்றுஒரு செல்கதி உய்க்கும் நீரால்
நோய்ஒக்கும் என்னின் மருந்து ஒக்கும்; நுணங்குகேள்வி
ஆயப்புகுங்கால் அறிவொக்கும் எவர்க்கும் அன்னுன்''

என்ற இப்பாடலில் தசரத மன்னனது அரிய பண்புகளைக் கூறி யுள்ளார் கவிஞர். இவை நாடாளும் தலைவனுக்கு அமைய வேண்டிய பண்புகளாகும் என்பதனை நாம் உணரலாமன்றோ!

குடியாட்சி :

தசரதன் நாட்டு மக்களைத் தன் உயிராகக் கருதிக் காத்து வந்தான். அவன் மக்களாகிய உயிர்களெல்லாம் தங்கியிருக் கின்றதொரு உடம்பு போன்றவனுமானுன். மக்கள் விருப்பப் படி தசரதன் அரசாண்டான் என்பதை அறிகின்றோம். குடி யாட்சியில் ஆள்வோன் உடம்பாவான். ஆளப்படும் மக்கள்

உயிராவர். இதனை உணர்த்தவே கம்பன் தசரத மன்னனை உடம்பென்று கூறி அவனால் ஆளப்படும் மக்களை உயிர் என்று பொருந்தக் கூறினான். உயிரும் உடம்பும் ஒன்றிய நிலைதானே இவ்வுலக வாழ்வு? உயிர் நீங்கின் உடம்பழிந்து விடுகிறது.

இவற்றை யெல்லாம் அறிந்த கவிஞன் இவ்வாறு கூறினான்

"உயிர் எலாம் தன்னுயிர் ஒப்ப ஓம்பலால்
உயிர் எலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்"

இக்கருத்தினையே மற்றோரிடத்திலும்,

"வையம் மன்னுயி ராகஅம் மன்னுயிர்
உய்யத் தாங்கும் உடல்அன்ன மன்னவன்"

என்றார். முடியாட்சியிலே குடியாட்சி. என்னே புதுமை!

கம்பன் பெருமை :

சங்க இலக்கியங்களும் அதற்குப் பின் தோன்றிய இலக்கியங்களும் அரசனை உயிராகவும் மக்களை உடம்பாகவும் கூறுகின்றன. ஆனால் கம்பன் இக்கருத்தினை மரபு பிறழாதவாறு மாற்றிப் புரட்சிகரமான குடியாட்சியைக் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டிலேயே அமைத்து விட்டான். நாட்டையாள்வோன் முடிமன்னனாயினும், குடியாட்சித் தலைவனாயினும், மற்றும் யாவராயினும் அதைப் பற்றிய கவலை கொள்ளாது நாடாள்வோனுக்கு இருக்க வேண்டிய உயரிய பண்புகளைக் கூறி அதிலே குடி நலங் கருதும் குடியாட்சியைக் கண்ட பெருமை உலகில் கம்பனுக்கும் உண்டு. கிரேக்க நாட்டு அரசியல் ஞானியான பிளேட்டோவும், அரிஃச்டாட்டலும் அரசியல் உலகில் புகழப் படுவதே போலக் கம்பனும் அரசியல் உலகில் புகழ் பெறத் தக்கவனே யாவன். பிளேட்டோ வகுத்துக் கூறிய ஐவகை அரசியல் முறையும் கம்பன் சுருங்கக் கூறிய அரசு முறையில் அடங்கும் என்பதை உணர்ந்தால் கம்பன் பெருமைக்கு எல்லை உண்டாமோ?

---

உ

சிவ சிவ

# தில்லைவாழந்தணர் மார்கழித் திருவாதிரைத் திருமஞ்சனப்பரிசு நிதி, முதற்பொருள் ரூ. 5000/-



''திருவார்தில்லைச் சிற்றம்பலத் தன்னுள்....உமையாள் காண விகிர்தனாடுமே,

''வளர்பொன் மலையும் வயிர மலைபோல் வலக்கை கவித்து நின்று
அளவில் பெருமை அமரர் போற்ற அழக னாடுமே,

''சிந்திப் பரிய தெய்வப் பதியுட் சிற்றம்பலந் தன்னுள்
நந்திமுழவங் கொட்ட நாதன் ஆடுமே,
எடுத்த பாதம் மழலைச் சிலம்பார்க்கத் தீமெய்ச் சடைமேல் திங்கள்
''அரவ மாட அனல்கை யேந்தி அழக னாடுமே, [சூடித் தேவனாடுமே,

''முனைவென் மதிசூடிக் கொத்தார் சடைகள் தாழ நட்டங் குழக னாடுமே—

என்றுவானோர்பணியவும்,மண்ணோர் ஏத்தவும் மன்னிநடம்ஆடும் தேனார் பொழில் சூழ் தில்லையாகிய சிதம்பரத்துள் ஸ்ரீ நடராசப் பெருமான் மார்கழித் திருவாதிரை, மாசி வளர்பிறைச் சதுர்த்தசி சித்திரைத் திருவோணம், ஆனி உத்திரம், ஆவணி வளர்பிறைச் சதுர்த்தசி, புரட்டாசி வளர்பிறைச் சதுர்த்தசி ஆகிய இவ்வாறு நாட்களிலும் கொண்டருளும் சிறப்புத் திருமஞ்சனங்களுள் மார்கழித் திருவாதிரை நாளிலும் ஆனி உத்திர நாளிலும் கூத்தப்பெருமானுக்குத் திருமஞ்சனம் முதலிய உபசாரங்களை வழாது இயற்றும் தில்லைவாழந்தணர்க்கு இதில் 3-வது பாராவில் குறித்த வண்ணம் திருமஞ்சனப்பரிசு அளித்தற் பொருட்டுத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் இத்தருமம் நிறுவப்பெற்றது. இது ''தில்லைவாழந்தணர் மார்கழித் திருவாதிரைத் திருமஞ்சனப் பரிசு நிதி'' எனப் பெயர் பெறும்.

2. இதற்குறிய சேமவைப்பு ரு. 5000/- (ருபா ஐயாயிரம்) இது ஆண்டொன்றுக்கு 3% வட்டி தரக்கூடிய அரசியல் கடன் தாள்களில் முதலீடு செய்யப்பெற்றுள்ளது. சர்க்கார் கடன் பத்திரம் எண். சிஏ. 246753–ரு. 5000/- இது நம்மாலும் நமக்குப்பின் உரிமை யுள்ளவர்களாலும் பரிபாலிக்கப்பெற்று வரும்

3. மார்கழியா திரைஎனின் முனிவ ரெல்லாம்
வந்துதடம் படிந்துபோது வணங்கி வாழ்த்திப்
பார்தருமா தோமுகன்முர் முன்ன மென்று
பன்னமுனி மன்னவன்நீர் பயிற்று மிந்தச்
சீர்தருமா தினமென்னத் தில்லை வாழுந்
திருவுடையந் தணரேந்தை திருநா ளென்று
சார்தருமா நவதீர்த்த நீத்தங் கொண்டு
தஞ்சமமஞ் சனவிழவு தருவித் தார்கள்"

என்று கோயிற் புராணத்துக் கூறியுள்ள வண்ணம் மார்கழித் திருவாதிரை நாளில் ஸ்ரீ நடராசப் பெருமானுக்கு அபிஷேகம் புரியும் முறையுடைய தில்லைவாழ் அந்தணர் ஒருவருக்கு ரு. 75-00 (ருபாய் எழுபத்தைந்தும்),

"இமையுளர்கள் அனைவரும்வந் தேத்தி வாழ்த்து
மானியென வருமாண்டில் ஆனி மாதத்
தருள்விரவுத் திரத்தினம்வந் தணுகிற் றென்னத்
தேனருநா ரணிமன்னன் இறைஞ்சி ஆனித்
திருநாளிங்கு எழவிழா செய்க வென்றான்"

என்று கோயிற் புராணத்துக் குறிப்பிட்ட வண்ணம் ஆனி மாதத்தில் உத்திர நாளில் எத்திறத்தினர் தமக்கும் ஆனந்த வாழ்வு ஈந்தருள நடம்புரியும் ஸ்ரீ நடராசப்பெருமானுக்கு அபிஷேகம் புரியும் முறையுடைய தில்லைவாழந்தணர் ஒருவர்க்கு ரு. 61/- (ருபாய் அறுபத்தொன்றும்), ஆக ரு. 136-00 (ருபா நூற்று முப்பத்தாறும்) இச்சேமவைப்பினின்று கிடைக்கும் வட்டித் தொகையினின்று ஆண்டுதோறும் அளிக்கப்பெற்று வரும்.

எஞ்சிய தொகை இத் தருமத்தை நடத்துவதற்குரிய சில்லறைச் செலவுகளுக்கெனப் பயன்படுத்தப் பெறும்.

4. வட்டி வரவுக்கேற்பத் திருமஞ்சனப் பரிசுத் தொகை கூட்டவும் குறைக்கவும் பெறும்.

5. இத்தருமம் வேறு எம்முறையிலும் பயன்படுத்தப்பெற மாட்டாது. இம்முதற் பொருள் அரசியலாரால் திருப்பியளிக்கப் பெறின் அதிக வட்டி தரக்கூடிய அரசியல் கடன் தாள்களில் முதலீடு செய்யப்பெறும். இம்முதற் பொருள் நம் பேரிலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் இருந்து வரும்.

சிதம்பரமாம் அம்பரமாம் திருச்சிற்றம்பலம் போற்றி.

திருப்பனந்தாள்.<br>Dated 6–3–1964. } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran*

---

Registered at Tiruvidamarudhur Sub-Registrar's office on 10-3-1964 as No. 25 of 1964 of Book 4, volume 50, pages 274-276.

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 10420 | அசபா நடனப் பதிகம் | தருமையாதீனம் வெளியீடு |
| 10421 | திருக்கச்சி நெறிக் காரைக்காடு திருப்பதிகம் | ,, ,, |
| 10422 to 24 | ஸ்ரீகுரு ஞானசம்பந்தர் அருள் வரலாறு | ,, ,, |
| 10425 | திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி | ,, ,, |
| 10426 | மெய்கண்ட நூற்பெரும் சிறப்பு | ,, ,, |
| 10427 | திருப்பாவை | ,, ,, |
| 10428 | தொட்டிக்கலை-மதுரகவி. ஸ்ரீ சுப்பிரமணிய முனிவர் பிரபந்தங்கள் | திருவாவடுதுறை ஆதீனம் |
| 10429 | அரசவனத்து அறநிலையம் | ,, ,, |
| 10430 | ஸ்ரீ காசி காண்டம் | ,, ,, |
| 10431 | சிவஞான சித்தியார் சுபக்கம் | ,, ,, |
| 10432 | சிவஞான போதச் சிற்றுரைத் தெளிவு (பற்பகுதி) | ,, ,, |
| 10433 & 34 | சிதம்பரம்-கண்கட்டி ஸ்ரீ மறைஞான சம்பந்த நாயனர் சைவச் சிறு நூல்கள் | ,, ,, |
| 10435 | சிவஞான தீபம் | ,, ,, |

(தொடரும்)

திருப்பனந்தாள் — ஸ்ரீ காசி மடம்

# ‘திருமுறை வெளியீடுகள்’

| | | ரூ ந பை |
|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை (அச்சில்) | — |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | 3 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | 3 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும் புதிய பதிப்பு) | 2 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் ,, ,, | 2 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் ,, | 1 30 |
| 7* | திருவாசகம் ,, | 0 56 |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) | 2 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் (மூலம்மட்டும்) | 0 56 |
| 10* | திருமந்திரம் ,, (புதிய பதிப்பு) | 2 25 |
| 11* | பதினோராந்திருமுறை ,, ,, | 1 50 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | 0 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் | 0 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) | 3 00 |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு (அச்சில்) | |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) | 3 00 |
| 17 | தாயுமான சுவாமிகள் பாடல் குறிப்புரையுடன் | 1 25 |
| 18 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) | 1 75 |
| 19 | கந்தபுராணம் — முதல் மூன்று காண்டங்கள் ,, | 2 75 |
| 20 | ,, யுத்த தேவகாண்டம் ,, | 2 00 |
| 21 | ,, தக்ஷகாண்டம் ,, | 1 50 |
| 22 | கந்தபுராணம் உரைநடை | 3 00 |
| 23 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் | 0 25 |
| 24 | கந்தரனுபூதி | 0 13 |
| 25 | கந்தர் கலிவெண்பா — ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் | 0 37 |
| 26 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் | 0 10 |
| 27 | கந்தர் கலிவெண்பா - மூலமும் — உரையும் | 0 37 |
| 28 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | 0 50 |
| 29 | சகலகலாவல்லிமாலை — ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | 0 06 |
| 30 | திருக்குறள் - அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும ஹிந்தி மொழி பெயர்ப்பும் | 1 50 |
| 31 | திருக்குறள் - பொருட்பால ,, | 2 50 |
| 32 | திருக்குறள் - காமத்துப்பால் ,, | 1 00 |
| | ௸ 29, 30, 31 திருக்குறள் 3 புத்தகமும் | 4 00 |
| 33 | திருக்குறள மூலமும் குறிப்புரையும் | 0 75 |
| 34 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | 0 13 |
| 35 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | 0 75 |
| 36 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | 0 37 |

| | | | |
|---|---|---|---|
| 37 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை மதுரை மீனாட்சியம்மை குறம் | ... | 2 75 |
| 38 | திருவாரூர் நான்மணிமாலை - முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... | 1 25 |
| 39 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை- தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... | 1 00 |
| 40 | பண்டார மும்மணிக் கோவை - காசிக் கலம்பகம் - சகலகலாவல்லி மாலை | ... | 1 00 |
| 41 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... | 0 75 |
| 42 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | ... | 0 50 |
| 43 | பெரியபுராணம் - உரைநடை | ... | 2 00 |
| 44 | திருவிளையாடற் புராணம் - உரைநடை | ... | 2 25 |
| 45 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... | 0 50 |
| 46 | திருக்கயிலைத் திருமுறை | ... | 0 37 |
| 47 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... | 0 19 |
| 48 | செந்திலாண்டவன் மகிமை | ... | 0 13 |
| 49 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... | 1 37 |
| 50 | ௸ ௸ பொருட்பால் 2-ம் பதிப்பு | ... | 2 75 |
| 51 | ௸ ௸ காமத்துப்பால் ௸ | ... | 1 20 |
| 52 | அபிராமி அந்தாதி - தெளிவுரையுடன் | ... | 0 50 |
| 53 | மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | ... | 0 50 |
| 54 | கந்தரனுபூதி-தெளிவுரையுடன் | ... | 0 35 |
| 55 | திருவாரூர்-திருப்பனுவல்கள் | ... | 0 10 |
| 56 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி | ... | 0 10 |
| 57 | பழமொழித்திருமுறை | ... | 0 25 |
| 58 | திருவாரூர் நான்மணிமாலை | ... | 0 50 |
| 59 | Hymns and Proverbs | ... | 0 30 |
| 60 | திருத்தொண்டர் புராணச்சாரம் | ... | 0 40 |
| 61 | அப்பர்விழா வெளியீடு | ... | 0 25 |
| 62 | நவக்கிரகமாண்பு | ... | 0 25 |
| 63 | குமரகுருபரர் வரலாறும், அற்புதத்தேவாரத் திரட்டும் | ... | 0 30 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்,
"லோகராஜ விலாசம்" 63, பிள்ளையார் கோவில்தெரு,
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

குறிப்பு:- * இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 48, 49, 50) தவிர்த்து ஏனையவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் - '64.